உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்

# பூவாளூர்ப்புராணம்.

இஃது,

திரிசிரபுரஞ்சாராப்

ம-௱-௱-ஸ்ரீ, ஒண்டிமுத்தையபிள்ளையவர்கள்

குமாரரும்

மணப்பாறைடிப்டிதாசில்தாராயிருக்குமாகிய ம-௱-௱-ஸ்ரீ

## ஒ-முத்தையபிள்ளையவர்கள்

வேண்டுகோளின்படி

அஷ்டாவதானம்

பூவை. கலியாணசுந்தரமுதலியாரவர்களால்

கத்தியரூபஞ்செய்யப்பட்டு

சென்னை

இந்துதியலாஜிகல்யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது

விகிருதிஸு சித்திரைமீ.



1890.

உ

சிவமயம்.

ஸ்ரீமத் தண்டபாணிசுவாமிகள்
மாணாக்கரும்
ஊற்றுமலைச்சமஸ்தானவித்துவானுமாகிய
தி-கந்தசாமிப்புலவரவர்கள்
இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

---

எழுசீர்க்கழிநெடிலவிருத்தம்.

வினைமலர் பொதுளு மிருதடங் கரைவாய்
வீற்று வீற்றாக வந்திரை தேர
நனை விரி குரண்டமாதிய வற்றை
நந்தின மணிகளை வரன்றித்
திரையெனு நெடிய கரங்களால் வீசித்
திக்கென வெரீஇயெழ வோட்டிப்
புரையிலசாந்தவரைப் புரப்பவர்க்கடுக்கும்
புண்ணியப் பொன்னி நன் னதிசூழ் (௧)

வளஞ்செறி சோழ மண்டலந் தனிலெம்
மறைமுத லுறைதலங் களுக்கு
ளுளஞ் செறியளியா துதியுறப் பூவா
ளூரெனுந் தலபுரா ணத்தைத்
தளஞ்செறி பழனத் திரிசிர புரம் வாழ்
சராப்பு நல் லொண்டி முத்தநிபன்
குளஞ் செறி வசனன் றவத்தில் வந்துதித்த
கோதிலா விதரண நிபுணன் (௨)

உத்தமப் பொறைநன் னீதிநூ லொழுக்க
முயர் சிவ நேசமிக கிசைந்தோன
சத்தமைப் புயல்போ லருளமுத் தைய
தன பதி தனது மித்திரனு
நத்து விற்பன னெனு சற்குரு நெல்லை
நகர் முனிக கடிமைபூண டவன்பொன
முத்தமிழ்க காஞ்சி நாகலிங் கேநதான்
மூலமாய் விரும்பிய வணணம். (க

வேண்டு நர்க் குதவுஞ் சுகுண நிக்ஷேபம
விமல ஞரடி மலாக் கனபு
பூண்டசுத தாதஜ விதசிகா மணியற்
புதவிலக் கியக்கடல் புகழ்தோய்
தாண்டருங கவிதைச சரபமட்டாவ
தானநற் பொககிஷ மியாருந்
தூண்டருங கமைசோ பூவைகல் யாண
சுந்தர மதுரநா வல்லோன் (உ)

சுவைமுதிா பலவின் கனிகளைக் கீறிச
சுவைகளை யெடுத்துடன பிழிதருச
செவையுறு நறுஞ்செந் தேனிடைத் தோய்ததுச
சீனியிற் புரட்டிவைத தாஙகு
நவையுறு கவிதை களின் பொருள் வழாது
நன்குணர்ந் தெடுதெடுத் தான்றோர்
குவையு மேனையரும் வியந்துளங் களிப்பக்
[illegible] (௩)

அறுசீரககழிநெடிலவிருததம.

அநதமலி மதுரிதநன்னய மிருநு வசன நடை
யாயியற்றச

சிநதைகுநு குலிதது முனைவ கூறியமுத தைய புகழ்ச
சீமான் மாதா

தங்கர மொத திலகுகுட வலைகண மணித திரள் கொழிக்குங
கடலசூழ் சென்னை

யிந்துதிய லாஜிகலயந கிரசாலை தனனிலசசிட்
டிசை பெற்ருனே (௬)

சிறபபுபபாயிரமுறறிறறு.

உ

கணபதிதுணை.

# சருக்க அட்டவணை

உ

சுப்பிரமணியக்கடவுள்
வரப்பிரசாதியாய்த திருவண்ணாமலையில்
எழுந்தருளியிருந்த
அருணகிரிநாதசுவாமிகள்
திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பூவாளூர்த் திருப்புகழ்.

தானதாததன தானதானன—தனதான.

காலன்வேற்கணை யீர்வாளாலமு
நோகொளாகொலை சூழ்மாபாவிகள்
காமசாத்திர வாய்பாடேணிக — ளவரோடுங்
காதலாகும்வி னவாய்கூறிகள்
மோகபாதகிர மாழூதேவிகள்
காசுகேட்டிட நாணவேசிக — ணகைகூரு
மாலைமூட்டிகள் மாயாரூபிக
ளானைபோறபொரு நேரேபூண்முலை
மாபுகாட்டிக ளாபேதக — மிடமோயை
மாபராகருக ளோடேகரிடிகள்
போநுபோககுத லாமோநீயெனை
வாவென்ப்பரி வாயேயாளவநு — மொருநாளோ
பாலருதிரு வாயாலோதிய
வேடாகவொதிர போயேவாதுசெய
பாடலதோறறிடு நாலாராயிர — மமண்மூடா
பாரினமேறகழு மீதேபேறிட
நீறிடாததமிழ் நாடடேறிட
பாதுகாததரு ளாலேகூனிமி — றிறையோனும
ஞாலமேததிய தோர்மாதேவியு
மாலவாயப்பதி வாழ்வாய்வீறுள
ஞானபாகநிய பாலாவேலவ — மயில்வீரா
காதகாததிகை சேயேகாவிரி
யாறுதேககிய சால்வாயாம்வள
காடுபோற்றிய பூவாளூருறை — பெருமானே.

உ

சிவமயம

திருசசிறறமபலம.

# பூவாளூர்ப்புராணம்.

## விநாயகர்காப்பு.

திருமாலும்பிரமனுமற்றமரருநதாமலாவேதசசிரத்தெஞ்ஞா
ன்று, மொருவாதபிரணவததினுரியபொருளொருதானெனறு
லகநதேற, மருவாருமலாககொனறைமனனவனபபிரணவமால
களிறுய்ததநத, பெருவாழ்வுதருங்களிற்றுககிடமாகுமெனதுள
ளப்பிறஙகனமாதோ.

---

## கடவுள்வாழ்த்து.

### பரசிவம்.

செமபொன்னேவளர்தழலிறசெறிசதுநகைதீா தெடுககுஞ
செல்வாபோல, வம்பொனசெயமணிமவுலியரிகருமலாதசவிசி
ருககையயற்குமேனைப், பைம்பொனசெயுலகினாககுமபாரின
ாககும்பலவுயிாககுமபவஙகளைலகிச, தமபொன்செய்பதமருளு
நரணிமுசலவரொவரவணாசசாாநதுவாழவாம்.

பராபரை.

மணியொளியுமலாமணமும்வயங்கிரவிக்கதிருமதிககலையும் போலத, துணிவருளுஞ்சிவபெருமானுடன்பிரியாததனதியல் பைத் தொல்லையான்மாப், பிணியொருவவெடுத்தருளுந்திரு மேனியிடத்துமிகப்பிறங்கக்காட்டி, யணிவிரவிவீற்றிருககும் பராபரையையெஞ்ஞான்றுமகத்துள்வைப்பாம்.

திருமூலநாதர்.

பொனபூததமணிமார்பன்வளியழலுங்கணையாகப்புவிதேராக, மின்பூததவிருசுடருமுருளாக வெளிவழியா விரைநது கஙகை, கொன்பூத்தசடைததுளும்பப்பகைகடந்தெண்வடிவுமொருகோ லமெய்யின், றென்பூத்தவுறப்பாகருந்திருமூலநாதர்பதஞ்சேர் நதுவாழ்வாம்.

தங்குமசவுந்தரி.

வேறு.

நஙகழலடுத்தவாகணன்மையிதுபோலத்
தஙகுவர்களென்றுழைதரிததவரொடொப்பப்
பைங்கிளியையங்கைகொடுபெண்ணுரையயிற்றுங்
குஙகுமசவுநதரிதன்கோலநினைவாமால்.

வெள்ளைவாரணப்பிள்ளையார்.

அள்ளிலையஞாஙகர்மழுவாதிகளிருந்து
யொள்ளுகிர்கணுதியினுருப்பகைகடந்த
வளளலெனவேயொருமருப்பினிகல்வென்ற
வெள்ளைமதவாரணமென்மெயவினைமுடிக்கும்.

## முருகக்கடவுள்.

உயர்ந்தவருமல்லவருமோங்கியதன்னைக்காற்
பயந்தழுவினைப்பனொல்பாளையறிவித்தாங்
கியைந்தமகவான்களொடேனல்வளாமாதும்
புயந்தழுவநின்றபுனிதற்கடிமைசெய்வாம்.

## திருநந்திதேவர்.

தத்தமகனைறவராய்ந்துதகச்செயுமுறையுந்தென்பா
லுததமன்முறையுமும்பராதியோர்க்குறுதுநீங்கக
கைததலப்பிரம்பினைச்சிக்கண்ணுதல்சேவையார்க்கும்
பத்தியினருளுநந்திபனிமலர்ப்பாதம்போற்றி.

## தண்டீசநாயனர்.

அநதிமதிமுடிக்கணிநதவழகர்திருவடிபிழைத்தார்யாரேயாக
வெந்திறலினவருயிரைவீட்டுவதேமேலானவிமலானந்த
தந்தருளுமுததியெனத்தாரணியோரறிந்துய்யத்தந்தைதாள்கள
சிந்தவெறிந்தவர்மலாத்தாளசிந்தனைசெய்தவர்மலமுஞ்சிந்து
மன்றே.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

மட்டுவிரிநறுந்துளபமாலாலுமயனாலுமறையினாலும், சுட்டி
யறியாதபெருஞ் சுகப்பொருளை யொருவிரலாற் சுட்டிககாட்டி,
மொட்டிளமென் முலையுமையாள்கொடுப்பவருந்தியவமிழ்தமு
முதுமாஙகே, கொட்டியதுபோறகவினைகொழிததகவுணியா
மணிதனைகுலததாளபோற்றி.

## திருநாவுக்கரசுநாயனர்.

கருங்கடலிற் றமையழுந்தப் பெருஞ்சிலையினுறப் பிணித்துக் கண்ணேடாமை, யொருங்குறுத்த சமணர்குழாந் துயர்க்கடலி னொருங்கழுந்தவுமிழைபைந்தேற, னெருங்கிதழப் பொற்கொன்றையும் வெண்டும்பையும் பாசறுக்குமுடிநிலவு வைத்தார், தருங்கருணைக்கடன் முழுகிக் கருங்கடலின் மிதந்தவரைச் சரணஞ்சார்வாம்.

## சுந்தரமூர்த்திநாயனர்.

நீடிய தண்கயிலாயத் தாடியிற்றனிமலவுருநிழற்றறாவாங்கே, கூடிவருமபெருங்கிழமைகுறித்து மறுபிறப்பிட்டதுங்குழகனமுன் னின், றாடியபெண்டைைத் தனித்தீர்த்துழித் தருசோழமையருள வுவப்பாற்பெற்றுப், பாடியெனையாண்ட முனைப்பாடிவளநாட னையேபாடிவாழ்வாம்.

## திருவாதவூரடிகள்.

வடகிழலிளொருநாலவர்க்கருளுநிலையிது வென்றுவயக்கிரா ங்கு, விடமிடற்றிலணிந்தபிரானகுருந்தடியிலிருந்துணர்த்தவி ழைந்துகேட்டோர், தொடருநிலையிதுவென்றுதெரித்ததுபோற் கரைந்துருகிச்சொரிந்துகண்ணீர், படருண்மெய்மமொழிதொ டுத்தமாணிக்கவாசகர்பொற்பாதம்போற்றி.

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

நூல்

# நைமிசசருக்கம்

அகண்ட சச்சிதானந்த கனீபூதனாகிய சிவபெருமானது கடைக்கணிப்பால் அசுத்தமாயாகாரியமாகிய பிரபஞ்சமுழுவதினையுஞ்சிருட்டிக்கும ஆற்றலையுடைய பிரமனுனவர் பூர்வகாலத்தொருநாள் சுசீலர்களாகிய தேவர்களெல்லாந் தன்னைச்சூழ வாசனைமல்கிய வோர் சிங்காசனத்தின் மீதெழுந்தருளியிருக்கையில் அக்காலத்தவ்விடத்தில் வாலகில்லியர் முதலியசில முனீந்திரர்கள் வந்தடுத்துச் சாஷ்டாங்கநமஸ்காரஞ் செய்தெழுந்து நின்று பலவாறுதோத்தரித்துச் சொல்லுவாராயினர். தாமரைமலரினகண்ணே தங்கியிருக்குந்தாதாவே தேவரீரது சரணங்களையே சரணமென்றடுத்தனம் அதிகதுன்பத்தினைச் செய்யுங் கலியுகத்திலேயுஞ் சற்றுமஞ்சாது அரியதவத்தினைச் செய்திட வோரிடங்காட்டியருளுவீரென்றனர். அருந்தவத்தினருரைத்ததை யமபுயனகேட்டுத் தன திருதயகமலத்தின் கண்ணே அனாதிமுத்தனாகிய பரசிவத்தினைத்தியானித்துத் தெளிந்துதெரிவிப்பாராயினர். ஐம்புலனைவென்றஅறவோரே! வருத்தனு சற்றுமின்றி நீவிரமகத்தாகிய சிவபுண்ணியங்களை விளைவிப்பதற்கேதுவாகிய தவத்தினைச்செய்தற்குரிய வழங்கியதலமொன்று காட்டுதுந் தெரிந்துகொள்ளுங்களென்றியம்பிச் சிறந்த தனது மனத்திற்சர்வலோகசரண்யனாகிய சங்கரனைச்சிந்தித்துக் குற்றமற்ற வொருசக்கரத்தினைப்படைத்துச் சொல்லுவார் மாதவத்தீர்! இதோ நாம்விடுகிறவிச்சக்கரமானதுருண்டோடி நிற்கின்றதலத்தினையே தவத்தினுக்குத் தக்கதாகத்தழுவவேண்டுமெனவிடுத்தனர் இங்ஙனம்இரணியகருப்பன்விட்ட சக்கரமானது உருட்டிவிசை யுடன்சென்றுதிரிந்தகிய முதநாகளாலே சேவியமானவ

ஞம் நாராயணமூர்த்தியின் திருக்கரத்தில் விளங்குஞ் சுதரிசன த்தைப்போலப்பத்துத்திக்கினு மொளியைப் பரப்பிகொண் டோடி யினிமையான தேனடைக ளுஞ்சலாடப்பூங்கொத்துக் கள் புட்பிக்கப் பசியசாகைகளோடுங்கூடிய சோலைகள்சூழ்ந்த வொருவனத்தில் வந்துநின்றது, பின்னர்முனிவர்கள் வாசனை யானது வீசப்பெற்ற தாமரைத்தவிசிலிருக்குந் தமனியக்கடவு ளையுருகிய வன்போடுபணிந்து விடைபெற்று அதிசீககிரமாகச் சக்கரத்தினைத் தொடர்ந்து அந்நேமிதங்கிய ஆரண்யமாகிய நைமிசாரண்ணியத்தில் தாங்களும்வந்து தங்கினர். அவ்வன மதிகவழகா விருக்கக்கண்ணுற் ருனந்தங்கொண் டவ்விடத்தி லேயே யயனருளியபடி யருந்தவமியற்றுவாராயினர்.

அந்நைமிசாரண்ணியத்தில் வாழுஞ்சிங்கங்களின்குட்டிக ள்தங்குவ குகைகளில் யானைகள் தங்கள் குட்டிகளைப்பெற்று வளர்த்துவருவன. கூர்மைபொருந்திய நகங்களையுடைய புலி க்கூட்டங்களின் மத்தியில் பசுக்கள்தங்கள் கன்றுகளை யீன்று வாழ்வன. கீரிப்பிள்ளைகள்வாழுஞ் சோலைகளில் சருப்பங்கள் குடிகொள்வன. ஒந்தியோடுமயில்களடுத்துமகிழ்வன. இந்தப் பிரகாரமாகப்பட்சிகளும் மிருகங்களுந் தங்களுக்குள் பகைமை பாராட்டாது பலவிடங்கள்தோறுங் கூடிக்குலாவிவாழ்வன. பகைமை, ஒல்லாமை, வேற்றுமை, முதலியவின்மையா யோ ரேதன்மையைவாய்ந்த நைமிசாரண்ய மானது முகையவிழ்ந்த கடுக்கை மாலையினையுடைய கண்ணுதற்பிரான் முத்தியினையே யொத்திருந்தது. அவண்வாழுமிருகங்களும பறவைகளுந்தங்க ட்காகாரம் வேண்டில் இயற்கையாயிறந்தவைகளின் ஊனைய ருந்தவதல்லது ஒன்றனுயிரைக்கொன்று துன்பமுறவுண்ணு வதில்லை. மும்மதங்களைப்பொழியாநின்ற யானைகளானவை காறறுவீசுதலினல் மரங்களினின் றுதிருமிலை முதலியவற்றை

யுண்ணுவதல்லது விருட்சங்களின் கிளைமுதலியவற்றைமுரித் தருந்துகிறதில்லை. அவ்விடத்தில் துன்பத்தினுக்கேதுவாகிய பிறப்பினையொழிக்கும் பிரகாசம் பொருந்திய சலம்நிறைந்த தீர்த்தங்களுந் தரித்திரங்களைத்தவிர்க்குமிரத்தினங்களும், வண்டுகள் ரீங்காரஞ்செய்துகொண்டு மதுவுண்ணுங் கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, முதலியவைகளு நிறையப்பெற்றன.

இங்ஙனங், கண்டோர்மனங்களைக் கவருங் கவினைவாய்ந்த நைமிசாரண்ணியத்தில் மற்றொருகாலத்தில் சவுனகாதிமகரிஷிகளொருங்கு சேர்ந்து இருக்குவேதத்திலிருக்குமெங்கள் பெருமானது திருவடிகளைத் தியானித்து ஒரு வேள்வியைவளர்க்கவாரம்பித்தனர். அக்காலத்தில் அவ்விடத்தில் பலமுனிவர்கள் புடைசூழ, மண்ணுலகத்தும் விண்ணுலகத்தும், மற்றுலகத்துமுள்ளார் போகமுதிர்ந்து முத்தியடைவதற்கேதுவாகிய பதினெண்புராணங்களைத் திருவாய்மலர்ந்தருளிய சூதமாமுனிவர் எழுந்தருளினர். அவரைக்கண்டமுனிவர்களுடனேயெழுந்தெதிர்கொண்டு வணங்கிச் *சோடசவுபசாரங்கள் புரிந்து தக்கவாதனத்தின்மீ தெழுந்தருளச்செய்து அகமகிழ்ந்துமனங்கசிந்து சர்வ மங்களகரமான சிவமான்மியங்களைக்கேட்கு மனமுடையராய் விளம்புவாராயினர். எங்கள் முனிரத்தினமே! பூர்வத்தில, சைவம், காந்தம், இலிங்கம், கூர்மம், வாமனம், வராகம், பௌடிகம், மச்சியம், மார்க்கண்டேயம், பிரமாண்டமென்னுஞ் சாத்துவிகபுராணங்களையும்; நாரதீயம், பாகவதம், காருடம், வைணவமென்னுந் தாமசபுராணங்களையும்; பிராமம்,

---

*சோடசவுபசாரமாவன-தவிசளித்தல், கைகழுநீர்தரல், காலகழுநீர் தரல், முகக்குடிநீர்தரல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரிநூற்றரல், தேய்வைபூசல், மலர்சாத்தல், நறும்புகைகாட்டல், விளக்கிடல், கருப்பூரமேற்றல், அமுதமேந்தல், அடைகாயதரல், மந்திரமலரால்ருச்சித்தல், மஞ்சளரிசிதூவல்.

பதுமம், பிரமகைவர்த்தம், ஆக்கினேயமென்னு மிராஜசபுரா ணங்களையு முறையே திருவாய்மலர்ந்தருளி அவற்றுளொன்று குஞ் சிவபுராணத்தின் உருத்திரசங்கிதையில் க்ஷேத்திரகாண டத்திலுள்ளமூர்த்திகளின் பெருமையினையும், தீர்த்தங்களின் மாட்சிமையினையும், தலங்களின் தகைமையினையும், ஆசிரமம், வருணம், ஒழுக்க முதலியவற்றினையுந் தேவரீரது திருமுக மாகிய தாமரையினின்றும வண்டுகளாகிய நாங்கள தேனுகிய அசசிவசரிதங்களையுணடு சிவானந்தத்தால் தேக்குற்றனம், அக் காலத்தில் தேவரீர் காவிரிநாட்டினுக்குக் கண்ணுயிலங்கு புற வினுக்கு நல்லருள்புரிந்த பூவாளூர் புண்ணியச் சரிதையைத் தொகுத்துக்கூறினீர். இப்போததனைவிரிவாக வகுத்துக்கூறல வேண்டுமென விரும்பினம், சிவபாரம்யச செல்வராகிய நீவிர் அதில் வறுமையுற்ற வெங்கட்குதவிபுரிதல வேண்டு வது தகுதியன்றோ? ஆதலாலறமாதிகளவளரும் பூவாளூாக காதையினை யருளிசசெய்யவேண்டு மென்றனர். இவற்றி னைக்கேட்ட பௌராணிகராகிய சூதமுனிவர் களிகூர்ந்து பூவாளூர்ப் புண்ணியனைத தியானித்துத் தனதாசாரியராகிய வாதராயணரின் பாதங்களைச்சிந்தித்து வினைக்கு விடைகொடு த்து விளங்கு மாதவங்களையுடைய மாதவர்கள முகங்களை நோக்கி யமுதமன்னவாசகத்தால்விளம்புவாராயினர். முனிவீர்! சித்தசங்கரமாகிய பூவாளூரிலெழுந்தருளிய திருமூலநாதரின் பெருமைகளை யாராலியமபிடக்கூடும. அவரதுசரிதங்களுமவ வாறே யொருவராலு முரைக்க முடியாது. ஆயினு முன்னாத தாமிரபரணிதீரத்திலுற்ற பொதியமலையி லெழுந்தருளியிருக குஞ் செந்தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர்பால கேட்ட உபகுமுனிவர் சயிமினிக்குச்சொற்றபடி யானுங்கட்குப் பூவா ளூர்த்தலத்தின பெருமையினையும, திருமூலமூர்த்தியின மகி

மையினையும, பறகுனிதீாத்ததகின் சிறப்பினையும, முனிவாக ளெழுபதுபெயா மெயஞ்ஞானமடையவிரும்பி வேளவிசெயத விதத்தினையும், அவ்வேளவியில் பிரமனெழுநதருளி பொழுகக மோடு சிவபெருமானைப் பூசைசெயத விததகினையும், வேளவி யாற்றிய முனிவாபாலிரங்கி முணடகசசெல்வன மெயஞ்ஞான வுண்மையினை வுபதேசிதத விததகினையும், சிவனனெனனுமு னிவர் தனக்கு அச்சுவினிதேவரியற்றிய நனறியின்பொருட்டு அவாகட்கு வேளவிபபாகஙகொடுகக அதனை யிந்திரன்தடுததுச சாபமேறறுச சிவபூசைசெயத விததகினையும, சுநதரமெனனு மரசன் ஒருமானைக்கொல்ல வதனலொருமுனிவரது சாபமே றறு மனமதனைகப்பிறநது கணணுதற்பெருமான கணகளாலு ருவமழிய அதனல் நாரதா கட்டளைப்படி இரதிதேவி சிவபூசை புரிநதவிததகினையும, பின்னா மனமதனுருவம்பெற்றுப் பிறை சூடியபெருமானை வநதனைபுரிநத விததகினையும், அககினிபக வான் சஙகரியால சாபமேற்று விடைககொடியோன வீரியத தையுணடு கஙகையினிற்கழிததுத் தனது புறவு உருவத்தை யொழிததுக்கொணட விதத்தினையும், மாதவ னொருவன்பொ ருட்டு வடககிலுள்ள கயாக்ஷேத்திரததின் பெருமை பூவாளூரி லுண்டாகவும இப்பூவாளூரி லுற்பவிதத நதியினற்பிதிரர்கள் காலகாலன் கருணையினல் வானேறும விதத்தினையும, நந்தன வனததில நமபாாவதியா லுண்டாகிய சந்திரவதியானவள் பூககொயகையில மணிசூடனபால் மோகஙகொணடு மஞ்சுள னென்னு மரசனுக்குப்புததிரியான விததகினையும், சநதிரவதி யின்பொருட்டு மணிசூடன் சநதிரசூடனென விருததாசலததி றபிறநது திரவியஞ்சேகரிககத தீாததயாததிரைசென்று பூவா ளூாப் புணணியனைப் பூசித்துததிருமபிய விததகினையும், தன னைவழிபாடாறறிய சநதிரசூடனும, அழகிறசிறநத சந்திரவதி

யாகிய குமுதையும் வருத்தமடைய வவர்கள்பொருட்டு மஞ்சு ளன்பால் சித்தராய்ச்சென்று பெண்பேசிய விதத்தினையும், சித தராய்வந்த சிவபெருமான் புன்னைவிருட் சத்தின்கீழெழுநத ருள அவரை மஞ்சுளன்பூசிதத விதத்தினையும், கூவிளவனத்து நாதர் சந்திரசூடற்குங் குமுதைக்குங் கல்யாணமுடிதத விதத் தினையும், உங்கட்குமுறையே சாற்றுதுங் கேண்மினெனப் பௌராணிகர் சொல்லததொடங்கினர்.

நைமிசச்சருக்கமுற்றிற்று.



## தலவிசேடச்சருக்கம்.

பூவாளூரென்னும் பதியானது திருமகளுக்குச் செல்வத் தினையருளியும், திறல்மகளுக்கு வலியினையளித்தும், தெய்வ க்கலைமகளுக்குக் கல்விவழங்கியும் வருவது. அங்கு பொலிந்த வழுக்கு நிலம்வாய்ந்த வழகிய சலநிறைந்த வயல்கள்தோறும் பொன்னையொத்த மகரந்தப்பொடிகளைப் புட்பச்செடிகள் உதி ர்த்துக்கொண்டேயிருக்கும். அன்னங்கள் நிலைபெற்றுநின்றுவி ளையாடுந் தடங்கள்தோறும் அவ்வன்னத்தினையொத்த மாதர் கள் ஸ்நானஞ்செய்து களிப்பார்கள். அங்குள்ள நந்தனவனங் கள் அங்குள்ள விடங்கட்கு வாசனையை விளைவிப்பதுடன் கண்டோர் கண்க ளிமைகொட்டாது நோக்கும்படி யதிகமாக மலர்களைச் சிந்திப்பெருமழகினை விளைவிப்பன. குளிர்ச்சியி னையும், கூர்ந்தசுவையினையுங் கொடுத்து மிக்ககளிப்பினைச் செய்யத்தக்கதென்று வயல்களையும், ஆறுகளையும், தடாகங்களை யும் தித்திப்பான நீர்த்துளிகளைச்சிந்தும் பொழில்கள் சூழ்ந் தகலாது நிறபன. பிராமணா மாளிகைகள தட்சணுக்கினியம,

காருகபத்தியம், ஆகவனீயம் என்னும நித்தியவேள்விகளால் வெம்மையுடையதாயினு மத்தீயைததனைனுள்ளே தழுவிக்கொண்டு இப்பிரபஞ்ச முற்றுமுய்யும்படி மழைவளங்களைச் செய்துகொண்டிருக்கும்; இரத்தினங்களா லிழைத்துக் கட்டப்பட்டிருக்கிற வீடுகள் அதிக வுன்னதமாக விருத்தலால் அவற்று ளழகாக வமைக்கப்பெற்ற சாளரங்களின்வழியே விளங்காற்றினைப் பெற்றுககொள்ளும். சேகரிக்கத்தகுந்த பொருள்கள் எத்தனைகோடியாயினுந் தாபித்துவைக்க மத்தியில் இடங்கொடுத்துக்கொண்டு ஆகாயமுழுவதினையுமளாவியநீண்டகொடிகளால் கடைவீதிகளழகைச் செய்துகொண்டிருக்கும். நிறத்தினைவாய்ந்த மணற்கேணிகளில் மொள்ளுந்தோறும் சலஞ்சுரத்தல்போல அவ்வூர்ச்செல்வர்கள் மனைகளில் குவித்து வைத்திருக்கும் நிதியானது கொடுக்குந்தோறுங் குறையாதபடி திருமகளிருந்து வாழ்வள். பிராமணர்களால் மகமும், க்ஷத்திரியாகளால் செயமும், வைசியர்களால் செல்வமும், மற்றையர்களால் தருமங்களும் பிரகாசித்துக்கொண்டிருப்பன. நல்ல வொழுக்கங்கட்கெல்லாமோரிருப்பிடமாய், இழுக்கென்பது சற்றுமவ்விடத்து இல்லையாய், முழுவின்பங்களையும் ஆசைகளையும் கொடுப்பதற்கிடமாய் விளங்குவது.

விசாலம்பொருந்திய இடங்களைவாய்ந்த வீடுகளின் உப்பரிகைகளானவை யோங்கி யாகாயத்தினது முகட்டினைமுட்டி நெருங்கியிருத்தலினுல் சூரியனுனவன் அவற்றின் மூலமாய்ச் செல்லுதற்பொருட்டே தன் தேரினுக்கு ஒற்றைச்சக்கரத்தினையும் ஒற்றைக்குதிரையினையுங் கொண்டனன், நவமணிகளாலிழைக்கப்பட்டு விண்ணுலகவளாக்குமுயர்ந்த வீடுகளில் வெண்மை நிறந்தங்கிய பூரணச்சந்திரன் உராய்ந்துசெல்லுந்தோற்றமானது குவளைபோன்ற கண்களையுடைய அத்தலத்து மாத

ரது குளிர்ந்தமுகமாகிய களங்கமற்ற சந்திரனுக் கொத்திருக்கும்படி தனது களங்கத்தை மாற்றுவதற்கு முயற்சிசெய்வதை யொத்திருக்கின்றது. யானைக்கூட்டங்கள் பொருந்திய குறுந்தெருக்களால்சூழப்பட்ட வீடுகணிறைந்த பெருவீதிகளில் கட்டியுள்ள தோரணங்களில் தொங்கவிட்டுள்ள முத்துக்களின்பிரகாசத்தைப் போர்த்துக்கொண்டிருத்தலால் அவ்விடத்திலுள்ள அழகிய வீடுகள் விபூதி சன்னித்துக்கொண்டிருக்கு மக்கினிப் பிழம்பாகிய அரனையே யொத்திருக்கும். எவ்விடத்தும் மங்களகரமான விவாகங்களும், எவ்விடத்து மினிமையான வாத்தியங்களும், எவ்விடத்தும் தாமரைபோன்ற முகத்தினையும் செவ்விய வாயினையுமுடைய உருத்திரகணிகைகள் நடனங்களும், எவ்விடத்தும் வாசனை வீசப்பெற்ற முல்லைமாலையைத் தரித்த கொம்பனார் கைகோத்தோடும் கூத்துக்களும், எவ்விடத்தும் காமசாகரக் கலவியின்பமுமே பரவியிருப்பன. வேத மந்திரங்களும் வேலைசெய்*மந்திரங்களும், ஓதுஞ்†சந்தனங்களும் உரைக்குஞ் சந்தனங்களும், காதல்கொள் பாடல்களும் ‡கருங்கணம்பாடல்களும், சீதளவாசமும் தேவர்கள் வாசமுமே நிறைந்திருப்பன. பூர்வத்தில் இந்திரனிழந்த செல்வமனைத்தினையு மறுபடியு மவனுக்களித்த இவ்வூரளவில்லாத வளங்களோடிருப்பது மோரதிசயமாமோ. இச்சுந்தரநகரானது துன்பங்களைநீக்கி ஞானமருளுதலா லிதற்கு ஞானக்ஷேத்திரமென்பார் முன்னோர். விருட்சங்களுள் "என்போல வெந்தத்தலத்தினுஞ் சிறந்த திருத்த திருவளர்தல" மென்றுண்மையைத் தெரிவிப்ப

*மந்திரமென்பது வீட்டினை

†சந்தனமென்பது அன்புகொள் ஸ்தனனியத்தினை

‡கருங்கணம்பாடல் என்பதனைக் கரும்-கண்-அம்பு-ஆடல் எனப்பிரிக்க.

துபோல நல்லவாசனைவீசும விலவவனம் நிறைநது வினைகளை வெருட்டு மததலமானது விலவவனமெனப் பெயரெய்தும். தாழமபூவினை வாளாகவுடைய மன்மதனுக்கு உருவத்தைக கொடுததமையால் பூவாளூரென்றும, அமமன்மதனுககு இரதியையீநது மங்கலம் சிறப்பச்செய்த காரணததாலும், சநதிர சூடனுககுங குமுதைக்குங் கல்யாணம்நடந்த சிறப்பாலும, கல்யாணபுரமெனவு மழைககப்படும. இரயிதது என்னுமுனிககுத திருமூலஙாதரிரஙகி அம்முனிவரது பிதிராகள் வடதிககிலுளள கயாக்ஷேததிரததின்பயனை யீஙகடையச்செய்ததால் கயாபுரியெனவுஞ் சொலலப்படும். இத்தலமானது திருவ்ானைககாவினுககு ஈசானதிசையி லொருயோசனை தூரத்திலும், தவததுறைககு வடதிசையில் இரண்டுகுரோச தூரததிலும, காவிரிககு உததரதிசையில் பொருநதியிருக்கும். பல சென்மஙகளில் பலதவஞ்செயதோககன்றி மற்றையோர்கள இப்பூவாளூரினுககு வரவும் வணங்கவு மரிதாகும், இப்பூவாளூரி லொருதினம் வாழப்பெறின் அருககனுலகத்தும், அம்புலியுலகத்தும், ஆயிரஙகண்ணனுலகததும், அன்னவூாதியுலகத்தும், அச்சுதனுலகத்தும் வாழப்பெற்று அநதிவண்ணனடியிணை பின் மருவுவர். உடலெடுததலினுல் பிரயோசனமிதுவேயென்று இததலததில் முனிவருக்கு மமுதமூட்டுபவர் திருபாற்கடலிலுண்டான அமுதத்தையுணடு, தெய்வலோகத்தரம்பையராதி செவ்வாயமுதமாநதி, படவரவணிந்தவெஙகள் பரஞ்சுடரின் பரஞானவமுதமுங கொள்ளுவாாகள். அததலதில் ஆதிசைவர்கட்கும, பெரியோாகட்கும், கவிராஜர்கட்கும், சிவனடியார்கட்கும் வீடுகட்டிககொடுததிடுபவர்கருததேவர்கள் தஙகள தஙகள உலகினைககொடுக்க நோவாா. சநதிரசூடனுஞ் சஙகரன் தன்னுலகங கொடுக்கச்சயைசெயவான். இததலத

தில் தினையளவுதவநதானஞ்செய்யின்ஆலவித்துப்போலப் பனையளவுபயனைத்தரும் இத்தலத்தில் எத்தகையபாவங்கள்செய்திடினும் மழையிற்பட்ட உப்புப்போல கரைந்துபோகும். பலவாகப்பன்னிப்பன்னிச் சொல்லுவதி லென்னபிரயோசனம் மேருவையடுதத காகமானது பொன்னிறமாவதுபோல இவ்வுலகத்து யாவரேனும் இத்தலத்திலிருந்து வாழப்பெற்றால் குற்றமற்ற ஜீவன்முத்தரேயாய் விளங்குவர். கேண்மின் முனிவீராகள்? இத்தலத்துமகிமையைச்சொல்லிமுடித்தேன். இனித்தீர்த்தமகிமையைச் சொல்லுகின்றேன் என்று பொறியைநதுமாறரும்புண்ணியசூதர் புகலுவாராயினர்.

தலவிசேடச்சருக்கமுற்றிற்று.

---

# தீர்த்தவிசேடச்சருக்கம்.

சர்ப்பாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கிற சடாபாரத்தினையுடைய சங்கரனர் இரயிக்குவனென்னுமோர்முனி உச்சிவிக்கும்பொருட்டு, அவரது பத்தியினுக்கிரங்கி வடக்கிலுள்ள கயாக்ஷேத்திரத்தினைக்காட்டிலு மிக்கமகிமையைப் பூவாளூரினுக்கு விளைவிக்கவேற்படுத்திய*பற்குனியென்னு மருமைப்பெயரோடொரு தீர்த்தமானது விளங்கும். தேவர்கள், முனிவர்கள், பிதிரர்கள் முதலியவர்கட்குரிய கடன்களைச்செய்யாதசிதடர்களாயிருக்கினும், பொய், களவு, கள், காமமென்னும்பஞ்சமாபாதகங்களைச்செய்துவரு மகாபாவிகளாயினும், இழிந்தகுலத்திற் பிறந்தவர்களாயினும், இத்தீர்த்தத்தில் முழுகினவாகள் அவர்கள் குற்றங்களினின்றுங் கரையேறுவர். தட்சி

---

*பற்குனி பாவம், நீக்குகல.

ணகயாக்ஷேத்திரமென்று தேவர்களால் சிறப்பிக்கப்படுகின்ற பூவாளூரிலிருக்கும் பற்குனி தீர்த்தத்தினையும் பெரியோரெல்லாந் தட்சிணகங்கையென்றே பேசுகின்றனர். இந்நதியைச் சமீபித்துப் படிந்தவர்கட்கே யல்லாமல் மிகுந்த வாஞ்சையினால் அந்நதி சலத்தினைப் புறத்தேயத்திற் கொண்டுபோய் முழுகுவோர்க்கும் மிக்கபயனை விளைவிக்கும். சாமான்னியவூர்களில் ஆகமக்கிரமப்படி நடத்திய காரியங்களினால் விளையும் புண்ணியத்தைக் காட்டிலும் சிவத்தலங்களில் செய்யிற்பதின்மடங்கு பலனதிகமாம். தேவர்களிறைஞ்சும் புட்கரதீர்த்தங்களிற்செய்யின் நூறுமடங்குபல னதிகமாம். பூவாளூரென்று உலகமெல்லாம் புகழுந்தலத்தி லன்போடு செய்வதினால் விளையும புண்ணியத்தினுக்கு உயர்வு மொப்பு அத்தலத்தின் கண்விரிநத புண்ணியங்களேயன்றிப் பிறதலங்களிலுண்டாகிய புண்ணியங்க ளெவ்வகையானு மொப்பாகா; அத்தகைய பூவாளூரிற்செய்த புண்ணியத்தினும் அத்தலத்துப் பற்குனிநதியிற்செய்த புண்ணிய மதிகம். அத்தீர்த்தத்திற்செய்த புண்ணியத்தினும் அத்தலத்தினுக் கலங்காரமாக விளங்கும் திருமூலநாதர் சந்நிதியிற் செய்திடும் புண்ணிய மதிகமதிகமாம். பொன்னையு மிரத்தினங்களையுங் கரைகளிலே கொணர்ந்துகொழிக்கும் அலைகளையுடைய பற்குனிநதியிற் கிரமப்படி ஸ்நானஞ்செய்து பிதிர்ததருப்பணஞ்செய்து அந்நதிதீரத்தின் ஆலவிருட்சத்தினடியிற் பிண்டமிடுபெவர்கள் பிதிர்க்கடனீங்கச் சிவலோகத்தினை யடைவர். அந்நதியிற் பிதிர்க்கடனை முடிக்கில் அப்பிதிரர்கள் நரகவேதனைகடந்து வேறு விதமான வினைகளுங்கெட முத்தியடைந்து சிவானந்த சாகரத்தில் முழுகுவர். புண்ணியஞ் செய்யவேண்டிய காலமிது வென்றும், தானத்தினை யேற்றுக்கொள்ளததக்க சற்பாததிர

சிவனொன்றும இப்பூவாளூரினிடத்தும, பற்குனி தீர்த்தத்தினி டத்தும் அததகைய மயக்கங்கொள்ளாது வினைகளை முடித்து வருவா. இழிஞராயினும் தானமேற்றுககொள்ள வொத்துக் கொண்டவனே சற்பாத்திரனும். புண்யகாலபேதமில்லை எக காலமு மொருகாலமேயாம். பாவத்தினைப்போககடித்தற்கேது வாகிய தவத்தினையும, தானத்தினையுஞ்செயய விரும்புவோா கையிற் பொருள்கிடைத்த வக்கணமேவத்தலத்திற் புரிந்தி டல்வேண்டும். அங்ஙனம்செய்யாது உத்திராயண தட்சிணா யனங்களினும், சூரியகிரகண சந்திரகிரகணங்களினும, அமா வாசி பருவங்களிலும, விதிபாாததம மாதப்பிரவேசங்களி லும், மாலியபட்சத்தும, மற்றைய புண்ணியகாலங்களில் மாத்திரம் சிராாததஞ்செயயின் அளவாகவே பிரயோசனமுண டாம. அந்ததிதீரத்தில் அன்னசிரார்த்தஞ்செய்யச சத்தியில ரேல், பிண்டப்பிரசாதமாயினுமிடுக, அதுவுஞ்செய்யச் சத்தி யிலரேல் எள்ளோடு சலத்தால் மந்திரஞ்சொல்லித தருப்பணம் புரிக. இத்தருப்பணமானது வடகயாவில அன்னசிராாத்தஞ் செய்ததனல்விளையும புண்ணியத்தினை யுண்டாககும். இந்தப் பற்குனி தீாத்தத்தில் அன்னதானஞ்செய்பவா நினைப்பதற கருமையாகிய வளப்பங்களை வாய்ந்த ஸ்ரீகணடபரமசிவனெ ழுந்தருளியிருககு மூலகத்தினுய்யானவனஞ்சேர்ந்து தானஞ் செயத அன்னமொவவொன்றுககும் ஒவ்வொரு கற்பஞ் சிவ போகமனுவிப்பா. அந்ததிதீரத்தில இரத்தினங்களேனும், பொன்னேனுமு, பூஷணமேனுமு, வஸ்திரமேனும், பொருளே னுஞ் சிவனடியாாகட்குத தானஞ்செய்யின், பூமியிற்பெருஞ் செலவத்தோடுகூடிய சககிரவாததிகளாய்ப்பிறந்து வாழ்ந்து, பின்னாச சிவலோகஞ்சோந்து சிவானந்தசாகரத்தில் முழுகு வா. அந்ததியின் நீாையுண்ணும் மிருகங்களும், பறவைகளும்,

அங்கிருந்த மீன்களும், அந்த நிசலத்தால் விளைந்த விருட்சங்களும், செடிகளும், கொடிகளும் அவைகளின் காய்கனிகளும் அவற்றினையுண்ட வுயிர்களும் தங்களாணவவினையைக் கெடுத்துத் தேவராகுமெனில் மனிதர்கள் மோட்ச மடைவரென்பது மதிசயமோ! இந்தப்பிரகாரமாகப் பாவங்களையெல்லாம் போக்கடிக்கும் அந்த நதியின் பரிசினைப்பகர்ந்தோம். இனிமேல் ஏ முனிவீர்காள்! இப்பிரபஞ்சத்தின் குற்றங்களையெல்லாங் குறைக்கும் பூவாளூரிலெழுந்தருளிவீற்றிருக்கு மெங்கள பெருமானின் பெருமைகளைப் பேசுவோங் கேட்பீர்களெனச் சூதர் சொல்லத்தொடங்கினர்.

தீர்த்தவிசேடச்சருக்கமுற்றிற்று.

---

## மூர்த்திவிசேடச்சருக்கம்.

அழகானது தங்கி வீசும்வாசனையோடுங்கூடிய நீண்ட தும்பிக்கையினையும், நான்குதந்தங்களையும், மிருதுவானநடையினையுமுடைய அயிராவதயானையையூர்ந்து செல்லுந் தேவேந்திரனது அருச்சனைக் கிரங்கி யவனிழந்துவிட்ட செல்வங்களையெல்லா மறுபடியு மவனுக்கீந்து கல்யாணபுரத்திலெழுந்தருளியிருக்குஞ் சிவபெருமானைத் திருமூலநாதனென்றுரைப்பர். வரிகளைவாய்த்த சிறைகளையுடைய வண்டுகள் தேனுண்டு ரீங்காரஞ்செய்யுந் தாமரையின்கண்ணே வீற்றிருக்குமிலக்குமியானவள்மிகுந்த வன்பினால் வந்தனைபுரிந்து செல்வப்பொருள் வழங்குதற்குரிமையைச் சுமத்தலினாலும், வில்வவிருட்சத்தின்கீ ழெழுந்தருளி யிருத்தலினாலும், அப்பெயர்களால

விளங்கும் கல்யாணபுரத்தி லெழுந்தருளியிருக்கும் பெருமானைத்துதித்துவருவர்.

செவ்விய தீக்கொழுந்தினை நீட்டியதென்னச் சிவந்து பிரகாசித்தெழூஉம் சடாபாரத்தினையுடைய முனிவர்கள்செய்த வேள்வியினுக்கு அருள்கூர்ந்து மெய்ஞ்ஞானத்தை யதிசீக்கிரமாகவருளிய காரணத்தால் திருமூலநாதருக்கு உலகமுழுவதும் ஞானத்தானேசனெனவும், வில்வவனத்தி லெழுந்தருளி யிருத்தலினால் வில்வவனநாதனென்றும், மங்களமிகுந்த மாங்கலியத்தை இரதிதேவிக்குதவியதால் கல்யாணவனநாதனென்றும், சிவனடியா ரொருவருக்கிரங்கி அவரது விவாகத்தினை முடிக்கும்பொருட்டுச் சித்தவடிவங்கொண்டு நடந்ததால் சித்தநாதனென்றும், பூவாளூரமர்ந்த புண்ணியனைப்புகலுவர். இத்தகைய திருநாமங்களி லொன்றினையேனு முரைப்பவருக்கு அவர்செய்த பாவங்களனைத்து மடியோடே மாய்ந்துவிடும். தேவர்கள்கூறில் தேவலோகங்களிலுள்ள போகங்களனைத்தினையு மவர்கட்கூட்டிவைக்கும். போகத்தினை வெறுத்தோர் கூறின் கங்கையையணிந்த கண்ணுதலோன் கழலடியிற்சேர்ப்பிக்கும். இப்பெயர்களிலொன்றைத் தம்புத்திரர்கட்கிட்டழைப்பாராயின் தங்கள் புத்திரர் மித்திரர் களத்திரர்களுடனே சகலபோகங்களையு மனுபவித்து, பிணியாதி பாவங்களினின்று நீங்கி, சொர்க்கலோகங்களில்மிகுந்த வளங்களையனுபவிப்பார். அப்பெயரை வாய்ந்த வப்புத்திரர்களும் அங்ஙனமேவாழ்ந்துஅக்கதியைமருவுவார். மறைகள் தினமுழங்கிக்கொண்டிருக்கும் பூவாளூர்ப்பெருமானது நாமமிட்டழைக்குமிருகம் பறவை முதலியனவும் பூர்வசென்மங்களின் பாவநீங்கி பலவளங்களும் பொருந்திய துறக்கத்திலே அரம்பையராதியிடத்துப் போகங்களை யனுபவித்துப் பின்னர் திங்களை

யுங் கங்கையையு முடியிற்றரித்த சிவபெருமானது தொண் டியற்றி யருள்பெற்றுய்யும். அனேக முனிவர்கள் பூசிக்கப் பெற்ற பெருமைபொருந்திய வில்வவனத்திலுள்ள பெருமா னது ஆலயத்தில் நுழைந்து பசுமுதலிய மிருகங்கள் தம்பசிக குப் புல்மேய்ந்திடின் அவை சிவபணிசெய்தனவாகவே கொ ண்டு அவைகளின் குற்றமகற்றிப் பெருமான் சொற்கலோகத் திற் சேர்ப்பான். வில்வவனநாதருக்கென்றே பிரார்த்தனை செய்து அவ்விடம் அடியாரால் விடப்பட்ட பூவைகள், கிளி கள், *யூகங்கள்,†இரலைகள், தகர்கள் இவையனைத்துந் தங்கள் முழுவினைகளையுமொழித்துக் கயிலாயத்திற் சிவகணங்களாகிப் பெருமானது கோயிலிலே வாசஞ் செய்துகொண்டிருக்கும் பாக்கியத்தைப்பெறுவன.

ஒருவன் கடன்பட்டாயினும், செய்யததகாத காரியங் களைச் செய்தாயினும், தஙகள் மனைவி மைந்தர்களைக்காக்கு மறிவிலிகள்போல, இடபவாகனத்தி லெழுந்தருளு மெமது திருமூலநாதருக்குப் பொருளுதவுவரேல் அவரே யன்பர்களா வா. அதிக செல்வவந்தர்களாயிருந்துந் திருமூலநாதனுக்குத வாரேல் அவர்கள் பொய்யன்பினர்களே யாவர். மெய்யன்பி னர்கள் வேண்டிய வேண்டியபொருள்களை யீந்து விரும்பிய விரும்பிய வருளைப் பெற்றுக்கொள்வர். பொய்யன்பினர்கள் பொருளையீயாது வாயாற்புகழ்ந்தாரேனும் பூவாளூர் புண்ணி யன் பதத்தையடைவர். அந்தோ! உய்யவிரும்புவார் பொய்ப் பொருளை யுறுதியாகக் கொள்வதும் பேதைமையேயாம். தரித் திரர்கள் பசியைத்தணியாது பொருளைக் காப்பாற்றி வைத்துக்

*யூகம்-கருங்குரங்கு.    †இரலை-கலைமான்.

கொண்டிருக்குஞ்செல்வர்கள் நரகத்தடைவரெனில், பூவாளூர்த் திருமூலநாதரின் பூசையாதிகட்குதவிச் சிறப்புசெய்யாது சேர்த்துவைத்திருக்கும் பொருளுடையார் நரகத்தையடைவரென்பதற்குத் தடையுண்டோ, செல்வமில்லாதவர்கள் சிவசாமபிராச்சியமாகிய முத்தியடைய விரும்பின் திருமூலநாதர் ஆலயத்திறசென்று புல்செதுக்கல், அலகிடுதல், கோமயத்தைத் தெளித்தல், கல்முதலிய குற்றங்களைக்களைதல், புட்பமாலை கட்டித்தரல் முதலிய பணிசெய்வரோ லவசியம் பெறுவர். தேகத்தில் தீராநோயுற்றுத் திருப்பணிசெய்வதற்குச் சத்தியிலராய வினையைக்கெடுத்து வீடடைய விருப்பமுடையார் பற்குனிநதியில் முழுகி, கோயில்வலமவந்து, காலந்தோறுந் திருமூலநாதரைத் தரிசித்து, தியானஞ்செய்து, அவர்புகழையெடுத்துப் பேசல்வேண்டும். தங்கள் ஆணவவினையையடக்கியாள வேண்டுபவர் பிரதிதினம் ஆலயத்திற்சென்று தரிசித்திடுக. அதற்கும் வலியிலரேல் தங்களவீட்டின் தலைக்கடையினின்று கும்பிடுக. அதுவுங்கூடாரேல் படுக்கையிலிருந்தபடி வில்வவனத்து விமலனார் திருவுருவைச்சிந்தித்து அவன் பெயரைப் பன்னிடுக திருமூலநாதரது திருப்பணி கைங்கரியமானது பிறப்பு, பிணி, பாவம் என்னுமிவைகளை வெட்டுதற்கோர் வாளாயுதமாகும். அவற்றுள்ளு முயர்ந்தது இறைவர் திருக்கோயில்கட்டும் புண்ணியமேயாம். பொருளமிக்குடையார் செங்கல்லினாலும், கருங்கல்லினாலுங் கட்டிடுக. பொருளில்லார் மரத்தாலேனும், மண்ணாலேனும், திரணத்தாலேனுஞ் செய்திடுக தேவதேவனாகிய மகாதேவன் இருவருக்குஞ் சமபலனையே யளிப்பன் பொருளுடையார் திரணத்தாற்கட்டியதினைவிட மண்ணினாற் கட்டியதற்குப் புண்ணிய மதிகம், மண்ணினாற் கட்டியதைவிட மரத்தாற்கட்டியதற்கு இருமட

ஙகு புண்ணியமதிகம். மரத்தாற்கட்டியதைவிட செஙகல்லாற்கட்டியதறகு நாற்பங்கு புண்ணியமதிகம். செங்கல்லாற்கட்டியதைவிட கருஙகல்லாற்கட்டியதர்கு எட்டுமடஙகு அதிகம் நூதனமாக ஆலயம் பிரதிட்டை செயவதினும் பழைய வாலயங்களைப் புதிப்பித்தல் பெருமபுண்ணியமாம விலவவனததீசன் ஆலயத்தைப் புதுககுவோா சிவனேயாவரலலது வேறு புண்ணிய மடையார்கள. தங்களிடததிற் கிடைதத பொருளுக்குத்தககபடி பூவாளுா ஆலயததிற சிறப்புசெயத வாகள் தங்கள் பாவஙகளினின்றும் இமைநேரத்தினீங்கி வடகயிலையடைந்து சிவகணங்களாய் வாழ்வாா இவாகள்சுற்றததினா பொன்னுலகையடைந்து பதினுன்கு தேவேநதிராகள வாழுமளவும் போகத்தை யனுபவிப்பா. நம்முடைய திருமூலநாதரொழுந்தருள ஆலய மினிதுசெயதோா தஙகள பிதிர்ககளெல்லா நீஙகாத நரகததினினறு நீங்கிச சுவாககலோகததில பொருந்துவா. அவாகள் குடும்பம் சூரிய சநதிரர் உள்ளவளவு கெடாதுவாழ்வர். எவனொருவன திருப்பணி சிவாலயததின கண்ணே செய்கின்றுனே அவனபாவமப்போதே நசிக்கும். பாக்கியமெல்லா மவனுக்கே பலிககும். விண்ணுட்டு வேநதனும் அவனுணைககஞசுவன் அவனினைதத கருமஙகளெல்லாம பூமியிலெளிதாய் முடியும். அததகையன்பெருமையை யெடுததுச்சொல்வா ராரிருககின்றுாகள்.

நாததிகம் பேசு நாவினர், பிறர் துன்பப்பட கோள சொல்லுபவா, சற்பாததிரததிற் பொருளைககொடாதவர், மூத்தோர் தாய்தந்தையா மொழிகளைககேளாதவர், பிறருககுக கொடுதத திரவியததைப் பிடுஙகிககொண்டவா, அநநியர்பொருளைக் கவாந்தவர், குற்றஞ்செய்தவர், அயலான் மனைவியின்மீது மனம் வைத்தவா, புததிரனைவி‌ றவா, பிறா செல்வங

களைக்கண்டு பொறாமை கொண்டவர், சிவநிவேதனஞ்செய் யாது அன்னமுண்டவர், வேதபாராயணம் பண்ணாதவர், அக் கினிகாரியஞ் செய்யாதவர், வேதாகமங்களிற்கூறு மியாகத் தினைச்செய்யாதவர், சுத்தவீரனை வஞ்சனையால் கொன்றவர், விரதயனுட்டியாதவர், யுத்தத்தில் மோசஞ்செய்து செயித் தவர், பெண்கள்மீது அவதூறுசொல்பவர், ஊரைக்கெடுத் தவர், மாமிசம்விற்றவர், அதனையுண்டவர், அதனையுண்ணச் செய்தவர், நன்றியில்லாதவர், ஆலயத்திலாடவரைப்புணர்ந் தவர், பொய்பேசுபவர், பிராமணரைக் கொன்றவர், மாதர்க ளைக்கொன்றவர், நிழல்தரு விருட்சங்களை வெட்டினவர், கிண றுதடாகங்களைத் தூர்த்தவர், குருவினுக்குத் துன்பஞ்செய்த வர், கருவினையழித்தவர், கன்னிகையைப்புணர்ந்தவர் முத லிய உபபாதகத்தவரும்; ஆசாரியனைக்கொன்றவர், ஆசாரியன் மனைவிதோள் சேர்ந்தவர் கள்ளுண்டவர், பொன்திருடினவர், இவர்களைச்சேர்ந்தவர் முதலிய மாபாதகத்தவரும்; சிவநிந்தனை செய்தவர், சிவாகமங்களைத்தூஷித்தவர், சிவபூசைசெய்யாத வர்முதலிய அதிபாதகத்தவரும்; உய்ந்து புண்ணியத்தினை யடையவேண்டு மாயின் சிவாலயப்பிரதிட்டை யொன்றே சாலும்.

சிவாலயங்களில் செய்யவேண்டிய கைங்கரியங்களாகிய உருத்திரகணிகை, யானை, குதிரை, பசு, நிலம், பாத்திர முத லியவற்றுள் தங்கட்குவாய்ந்தவளவீந்து இறைஞ்சிடினும் அப் பாதகங்கள்போம். இவ்வாறு அப்பாதகங்களைக்கழிக்க வேலாத வா எளிதிலே போகுவதற்குபாயமாவன, பஞ்சமி, பூரணை, சுக்கிலபட்சத்துச சதுர்த்தசி, அட்டமி, திருவாதிரை, மாசி மகம், ஆடிமுதலமாவாசைகூடிய சோமவாரம், பங்குனிபூரணை, பங்குனி உத்தரம், சோமவாரம்வரு முதலமாவாசை, ஆதி

வாரததுச்சத்தமி இவைதங்கிய உத்தராயண புண்ணியகாலங களில் பற்குனிநதியில் ஸ்நானஞ்செய்துவேதபிராமணாகட்கு இயன்ற திரவியந்தந்து, பசுநெய்வார்ததுத் தாமரை நூல்திரியிட்டு, ஞானநாயகனுகிய திருமூலர் சந்நிதானததில் விளக கேற்றி, நறுநறுபமிட்டுப் பசும்பாற்கொண்டு மந்திரததாலபிடேகஞ்செய்து குற்றமில்லாத சுகந்தத்தாலும், வில்வத்தாலும், அருச்சிதது, அறுசுவையடிசில் நிவேதித்து, சிவனடியாாகளாகிய பிராமணர்களை யுண்பித்து, இறைஞ்சி வந்தனைசெயின் எத்தகைய பாதகங்களும் இமையளவில் நீங்கப்பெற்று வானுலகமடைவர். பாதகங்களைச்செய்யாத புண்ணியர்கள் உருவிலியாகிய மன்மதனுக்குருவளித்த உமாமகேசன் உச்சியில அபிடேகம்புரிந்தால் ஏழுலகு நடுநடுங்கும்படி மான்மழு சதுர்புய காளகண்ட திரிநேத்திரர்களாய் விளங்குவா. அளவில்லாத புகழோடுங்கூடிய பூவாளூர்நாதர் திருமுடியில் புட்பஞ்சாததுவார் சந்திரசூடராய் விளங்குவர். பிரதட்சணம்வந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து கைகுவிக்கின், தேவர்களெதிரில் நின்று கைகட்டி நல்லவரங்களைககேட்டு யாசிதது நிற்ப நாயகராய்வீற்றிருப்பா. சகல வளப்பத்தோடுங்கூடிய வில்வவனததில் ஆதிசைவப்பிராமண ரொருவருககு வீடொன்று கட்டியீந்து அவ்வூரில் தாபிக்கில் தேவர்களெல்லாந் தொழுதேத்த ஓர் சிவலிங்கப் பிரதிட்டைபண்ணிய பலனையொக்கும். சிவனடியார்களை அவ்வூரில் குடியேற்றினு மப்பலனே யடைவர். திருமூலநாதர் திருக்கோயிலில் அலகிட்டு, மெழுகி, சுதையால் கோலந்தீட்டிவருவரேல் அவர்களுடையவீட்டில் இலககுமியானவள் குடியிருநது எக்காலமு நீங்காமற் பலவிதப்பட்ட செல்வங்களால் அலங்கரித்துவருவள். ஆலகாலவிடததாலலங்கரிககப்பட்டிருககிற வழகிய மிடற்றினையுடைய அம

லனுகிய வில்வவனத்துத் திருமூலநாதருக்கு நித்திய, நைமித்திக, பஞ்சபருவத் திருவிழாக்களை நடத்திவருவரேல் அவர்களவாழும் வீடுகள் எக்காலத்தும் நீங்காத மங்களகோலமே பொலிந்துகொண்டிருக்கும், திருமூலநாதர் வெள்ளைவிடையின்மீது குங்குமசவுந்தரிசமேதராய்த் திருவோலக்கங்கொண்டருளுந் திருவிழாவினைத் தரிசிக்கப்பெற்றோர் தங்கள் ஆணவமலங்கெட சீவன்முத்தர்களாய் வீற்றிருப்பர். செல்வமலிந்த திருமூலநாதராய் விளங்கும் சிவலிங்கப்பெருமானின் திருவருட்பெருமையைச் சொல்வகையினு லெடுத்துப்பேச முற்றுமோ. பரிசுத்தமபொருந்திய முனிவிர்காள்? இனியத்தலத்தில் வினைகெடும்படி வேள்விவளர்த்த வித்தத்தைச்சொல்லுவேன் கேட்பீரகளென்று வியாசமாணுக்கர்விளமபுவாராயினூ.

மூர்த்திவிசேடச்சருக்கமுற்றிற்று

---

## வேள்விச்சருக்கம்.

இலக்குமிதேவிக்கிருப்பிடமாகி, மணிமாடங்களசெறிந்து, பலவளப்பங்கள் நிறையப்பெற்றுத் தெய்வநாட்டினையொத்திருக்குந் தவத்துறையிற்சென்று வினைமுழுதும விடைகொண்டேகப்பூசித்துப் பிருகு, வங்கிரசு, வசிட்டன், கசியபன், அத்திரி, குச்சன், கவுதமன் இவர்களெழுவரு மாதவம்புரிந்து வருங்காலத்தில் இவர்கள் மைந்தர்களாகிய பார்க்கவர், ஆங்கீரசர், வாசிட்டர், காசிபர், ஆத்திரேயர், கவுச்சிகர், கவுதமீயர் என்னவோதும் எழுபதினமர்ஒருங்குகூடி, புரம், வனம்,க்ஷேத்திரம், விமானம ஐந்துஞ்சிறந்தத்தல மெங்குள்ளதென்று ஒருவருக்கொருவர் விசாரித்து நெடுங்காலந் தமமுடையவறிவினு

லாய்ந்து தெளியாது திடீலெனவெழுந்து கருங்காலனுயிர் குடித்த செங்காலனாகிய சிவபிரானிடத்திலன்புடைய தங்கள் தந்தையாகளை யடுத்துத் தாள்களை வணங்கிக்கேட்கக் கருணையினால் எழுமுனிவர்களுந் தங்கள் புத்திரர்களாகிய எழுபதின்மருக்கு முணர்த்துவாகள். அறிவிற்சிறந்த அரும் புதல்வீர் கேண்மின், எத்தகைய புரங்களினும் பூவாளூரொன்னும் புரமும், வனங்களில் விலவவனமும், நதிகளில் பற்குனிநதியும், தலங்களில் ஞானத்தலமும், விமானங்களில் கல்யாணவிமானமுஞ்சிறந்திருப்பன. இவ்வைந்து மோரிடத்துச்சிறந்து தங்கட்குத்தாங்களே யொத்திருக்கு மொருதானமானது திருமங்கலமெனனும் பூவாளூரேயாம். அத்தலத்தில் திருமூலநாதனொனு மருமைப்பெயரோடு உத்தமத்திலுத்தமமாய் ஒளிர்கின்ற சுயம்பமூர்த்தியானச் சிவலிங்கப்பெருமான் எத்திக்கிலுள்ளவாகட்குங் கிருபைபுரிந்து வீற்றிருக்கு மத்தலத்தினுக்கேகுவீரொன்றனர். உடனே எழுபது முனிவர்களும் அகமகிழ்ந்து, முகமலர்ந்து, தந்தையரைப்பணிந்து, எழுந்து ஞானத்தலமாகிய பூவாளூரெய்தி, பற்குனிநதியிற்படிந்து, கிரமப்படி கடன்களைச்செய்து, மிக்கவன்பினோடு திருமூலர் சந்நிதானத்தின முன்பு காந்தமிழுக்கும் இருப்பூசியைப்போலச்சார்ந்து, துதிபுரிந்து, தங்கட்குள் ஆராய்த்துவக்கினர்.

இத்தலத்தின் மகிமையை யென்னவென்றுரைப்போம், இவ்வெல்லையை யடைந்த மாத்திரத்தில் தலைமேலிருந்த பெரும்பார நீக்கியதுபோலச் சிந்தையின்கண்ணிருந்த துன்பங்களியாவும் நீங்கப்பெற்றோம். ஆதலாலுயர்ந்த வித்தலத்திலிருந்து போகத்தை விரும்புதலே நலமாம். அதுவே வுயாவுமாம். ஆயின் காலாந்தரங்களில் மரணமடையுந் தேவர்கள்போகத்தை யிச்சிக்கின் அது மறுபடியும் பிறப்பில்சார்ந்து உயி

தளாவதன்றி மெய்ஞ்ஞானநதமடையும்விதத்தைக்காணேம். எல்லாவற்றினிக்கு மேலென்று முயன்றடைவது விததக யோக முதலியவற்றால்விளையு மின்பமும், பிரமாதிதேவாகள சூழ்ந்திருக்குங்கதியுமன்று. நமதாசையானது நீங்கி யுத்தம மாகிய மெய்ஞ்ஞானத்தை யடையும்வழியில்முயலவேண்டும். அத்தகையஞான முக்கண்பெருமானுல் உணர்வதன்றி ஆன்ம வர்க்கத்தால் அறியுந்திறமன்று. அந்தச்சேதனனும் விளங்குஞ் சிவபெருமான் திருவுளமகிழும்வண்ணங் குற்றமற்ற வேள்வி யொன்று செய்வோமெனச் செய்யத்துவக்கினர். செங்கற்க ளால் வேதிகைகள்கிரமப்படிக்கட்டி மணிகளினுலும், பொன்க ளினுலும்,பாத்திரங்கள்செய்து *சோமமாதிதிரவியவகைகளெ ல்லாஞ் சேகரித்துத் தனித்தனித் தாங்கள் தொடங்கினர்கள்.

†இருத்துவிக்களும் நெருங்கிய‡மானருமெல்லோருந் தங் கள் கருத்தில் மிகுந்தவாசையினுல் தீக்கையைக்கலந்தனா கன் பரிசுத்தமாகிய சிவபெருமான் சந்நிதியி லவருக்குரிய பெருத்த சைவசத்திரயாகமென்னும் வேள்வியை நடத்தத

---

*சோமம்-ஓர்பூண்டு. இது அக்கினிஷ்டோமத்தில் ஸோ மத்தின் சாற்றைப்பிழியும்கிரியைக்கு அபிஷவம்என்றுபெயர் அக்கிரியையின்படி பிழியப்பட்டிருக்கிறது அபிஷுதம்.

†இருத்துவிக்கு-யாகத்தில் யெசமானிடத்தில் தக்ஷிணை வாங்கிக்கொண்டு, அதற்குரிய ஹோமமுதலானதொழில்களை நடத்துகிறவர்களுக்கு 'ருத்விக்கு' என்றுபேர் அவர்கள் 'அக னீத்திரர்' 'ஹோதா' 'பிரம்மா' முதலாகிய வெவ்வேறுபெயர் களையுடைய கசு-பேர்கள். தேவயாகஙகளில், அக்கினி, ஹோ தாவாயிருப்பவர் ஹோதாபதத்திற்கு, அழைக்கிறவனொன்றும் ஹோமம்பண்ணுகிறவனொன்றும், ஆததமாகும்.

‡மானர்-புடையார் அதாவது யாகத்தில் இடையூறுவா ராமல் பாதுகாப்போா.

தொடங்கி*இட்டி,†பிரவர்க்கியம்,‡அக்கினிட்டோமம், விதை யாதியாகச் சமைத்தகள்முயன்ற சட்டகாலங்கள் மூன்றினுஞ் oசவனங்கள்மூன்றினையும் கற்பநூலில் சொல்லியபடிநடத்தினர். குற்றமற்ற சாமவேதியர்கள் கானந்தொடங்கினர் ஓதிர் கணத்தினாகள் சமுசனையை யியற்றினர்கள். அத்துவரிக்கணத்தர் அத்துவாரம்பண்ணினர்கள். பிரகாசமலிந்த வெண் கோணம் பொருந்தச்செய்து யூபமலங்கரித்தனர். நானுவித மாகிய தெய்வப்பசுக்களைப் பலகயிற்றினுற் கட்டிப்பிணித்து வேதமந்திரங்களினு லவற்றினுன்மாவை அத்தேகங்களினின் றும் பிரித்து அப்பசுக்களின் வபையையெடுத்து அக்கினியி லிட்டு மிருந்த வங்கங்களினுனே ஆகுதி விதிப்படி செய்தனர் அவ்வேள்வியின்கண்ணே யிருந்தவர்களையும், மற்றைய பிராமணர்களையுந் தேவனுகவே பாவித்துப் பூசைமுதலிய வியற்றினர். இவ்வாறு மாதவர்கள்தந்த அவிர்ப்பாகத்தினை யினிதேற்றுக்கொண்டு பிரகாசம்வீசு மிரத்தினங்களிழைத்த கிரீடங்களைத்தரித்த தேவலோகத்தமரர் மகிழ்ச்சி கூர்ந்தாகள் அமரர்கட்கு அமரனுய்விளங்கு மமலனுகிய வில்வவனநாதனைக்குறித்துப் பரிசுத்தம்பொருந்திய வேள்வியை நடத்திய மாதவர்கள் விளக்கத்தினை யுரைத்தேம், வண்டுகள் ரீங்காரஞ் செய்யுந் தாமரைமலரின்கண்ணே யெழுந்தருளியிருக்கும் பிரமதேவனுனவர் அவ்விடத்தினுக்குவந்தெழுந்தருளியதைச் சொல்லுதுங் கேட்பீரெனச் சூதமாதவ னுரைக்கின்றனர்.

வேள்விச்சருக்கமுற்றிற்று.

---

*இட்டி=யாகம். †பிரவர்க்கியம்=ஓமத்தீ. ‡அக்கினிட்டோமம்=சோமயாகம்.

oசவனம்=ஸோமாபிஷவம், அக்கினிட்டோமமானது; பிராதஸ்ஸவனம், மாத்தியந்தினஸவனம், றுதிதீயஸவனம் என மூன்றுபாகங்களையுடையதாம்.

## பிரமன்வரவுச்சருக்கம்.



இந்தப்பிரகார மகத்தினைத் தவத்தினர்கள் முடித்துக் கொண்டிருக்கிறகாலத்து இப்பிரபஞ்சத்தின் நல்ல வளப்பங் களைக்காணுங் கருத்துடையராய்ப் பிரமனானவர் தன்னிச்சை யால் சத்தியலோகத்தைவிட்டு நீங்கி அன்னவாகனரூடராய் ஆகாயவழியாகச் செல்லும்போது, பிரகாசம்வளரு மாடங்கள் மலிந்த வில்வவனத்திற்கு நேரே சூரியன் சஞ்சரிக்கும்வானில் வர, அன்னவூர்தியானது நெஞ்சந்துன்பப்படும்படிஅசையாது கன்மலைபோலத் தம்பித்து நின்றுவிட்டது. பிரமாவானவர் தனது வாகனமாகிய அன்னத்தின்முன்னேயும், பின்னேயும், நான்கு திக்குகளிலேயும் பார்த்து என்னகாரணத்தால் இவ்வா றசையாது நின்றுவிட்டதென வாலோசித்துப் பூமியைநோக் கிப்பார்க்கையில் வில்வவனநாதர் சந்நிதானத்தின் முன்பு மாதவர்கள்செய்கின்ற யாகத்தின் தீம்புகையானது அன்னத் தின்முகத்தினைத் தாக்கினவென்று தீர்மானித்து, அவர்கள் சொல்லும் வேதமந்திரங்களைக் காதாறக்கேட்டு, இதுமிகுந்த சிறந்ததலமென வெண்ணி அச்சமும், அன்புந் தோன்ற அதி சயத்த மனமுடையவராய், உச்சியிலிரண்டு கைகளையுங்குவித் தவராய், வேதமொலிக்கு நாவினையுடையவராய் அன்னவாக னத்தை விட்டிறங்கிப் பூவாளூர்வந்து சேர்ந்தனர். அக்காலத் திலவ்விடத்துச் சிலர்வேதவாதமும், சிலர்பிரமவாதமும், சிலர் கருமவாதமும், சிலர் ஞானவாதமும், சிலர் கணிதவாதமும், சிலர் நீதிவாதமும், சிலர் கற்பவாதமும், சிலர் புராணவாத மும், சிலராகமவாதமும், சிலர் வியாகரணவாதமும், சிலர் நிக ண்டுவாதமும், சிலர் காப்பியவாதமும், சிலர் நாடகவாதமும்,

சிலரலங்காரவாதமும், சிலர் தனுர்வேதவாதமும், சிலர் மற்ற கலைஞானவாதமும இருடிகள் செய்துகொண்டிருக்க, தெய்வ வேள்வி முன்னேதோன்ற அவ்வியமகன்ற வறிவையுடைய பிரமாவானவர் மகிழ்ந்து அதிசீக்கிரமாக ஸ்நாநமாதி நித்திய கடனை முடித்துக்கொண்டு செல்ல வுடனே வேள்வியியற்று மாதவர்கள் எழுந்து கந்தமூலங்களைக் கையுறையாக வேந்திச் செல்ல வவர்களையெல்லாங் கரத்தாலமர்த்திக் கோயிற்புகுந் தனர், முனிவர்கள் தன்னைச்சூழ ஆலயத்திற்சென்ற வேதனு னவர் திருமூலநாதரின் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து எழுந்து ஆடிப்பாடி யாசையோடு வலமவந்து காப்பாய் காப்பா யெனவிரந்து, இத்தலத்தின் பெருமையைச் சற்றுமெண்ணாத வெளியேனுக்குப் பத்தியருளவேண்டி, யனனந்தன்னையாகாய வழியிலடியெடுத்துவைக்க,வொட்டாதுசெய்து என்னையிங்கு வரச்செய்த கருணைவள்ளலே என்பிழைகளைப் பொறுப்பாயெ ன்றுரைத்து விடைபெற்றுத்திரும்பி, வேள்வியாற்று மந்தணர் முகத்தை நோக்கிச் சொல்லுவாராயினர். அந்தணீர்! இப்பூமி யில் திருமூலநாதரது இனிமையானவருளுக் குரியவராயினீர் இதைக்காட்டிலுமுயர்ந்த கருமமென்ன விருக்கிறதென்று மந் திரவேள்விச்சாலையில் மலர்ந்தமுகத்தோடு புகுந்தனர். அவ் வேள்விச்சாலையை யடுத்தமாத்திரத்து அங்கிருந்த தாபதர்கள் அழகிய தாமரையினையே யாலயமாகக்கொண்ட பிரமனுக்கு ஆதனம், அருக்கியம் மாலைமுதலிய வுதவி இனிமையான பழ முதலிய வீந்து பாற்கடலிலுண்டாகிய வமுதம்போன்ற பெரு மைபொருந்தியதோத்திரங்களால் தோத்தரிப்பாராயினர். அன் னவர்களனனே! தேவரீரிங்கெழுந்தருளிய மாத்திரத்தில் சிவ பெருமானிடத் தன்பில்லாத யாகங்கள் செய்யுமழுகியமக மிடை யூறின்றிநிறைவேறியது. நிலைபெற்ற வில்வவனநாதரு மகிழ்ச

சியாகவே கொண்டனர் நெருங்கிய அவிகள்சொரிந்து செய்கின்ற வேள்வியினால் நாங்களெல்லோரும் வில்வவனநாதரருளினால் வேள்வியின் பயனைப்பெற்றனம். அன்றியு நீக்குவதற்கருமையாகிய இப்பிரபஞ்சத்தின் பந்தமு மிப்போதே நீக்கினோம். பரமானந்தப் பரவையினும் படிந்தோமென்றனர். செவ்விய சொற்களினாலே யிவ்வாறுகூறிப் பிரமனோடு எஞ்சிய வேள்வியினையுமுடித்து, இனிமையான புண்ணியங்கள் மென்மேலோங்க வளருஞ்சுத்தியே கனிதினத்தின் பெருமானுக்குரிய நெய்தோயப்பெற்ற அபையை அழலில் இட்டார்கள். அப்போது, சனகாதி நால்வர்வணங்கும் பொன்மயமான நூபுரத்தினை யணிந்த திருவடிகளையுடைய சிவபெருமான் உமையுடனே வலிய வெள்ளைவிடையின்மீது பூதகணங்கள தன்னைச்சூழ்ந்து நெருங்க, முனிவர் சொரிந்த வபையானது அவியினின்றும் தனது முகத்தினிடத்துக்கமழ வெழுந்தருளினர். சயசயவென்ற தோத்திரத்தோடு ஒப்பற்ற ஆகாயமுகட்டில் நெருங்கி பலம்பொருந்திய நீண்ட வாயுதங்களுடைய தேவர்கள் மலர்மாரிபொழியப் பஞ்சவாத்தியங்களுமுழக்க அயன்முதலிய மாதவர்கள்பலரும் அஞ்சலித்த கரங்களோடு எழுந்திருந்து நீங்காதவாசையினால் என்புமுழுது நெக்கு நெக்குருக, தேகமுழுவதும் வழிந்து விழிகளினின்றுவருங் கண்ணீரில்கலந்தவிபூதி சேறாகப் பூமியில் விழுந்து எழுந்து பலமுறை சூழ்ந்து எத்துவாராயினர்.

புள்ளாகியநான்முகனீண்முடியும்போனேனமதாகியமால் பதமுந், தள்ளாவலியுமனமுந்தலைமைச்சலமுந்தளரத்துருவிப் பணியு, நள்ளாரமுதச்சுவையேசரணநராயினுநன்மையினைத் துனாபால், விள்ளாதவிளங்கொளியேசரணமெய்ஞ்ஞானதலத திறைவாசரணம்.

தண்ணூமதிவேய்ந்தபிரான்சரணஞ் தழலாடியசங்கரனே சரணம, பண்ணூர்தருவீணைதராசரணம்பனிமால்வரையில்மரு காசரணங், கண்ணூர்தருவாணுதலாய்சரணங்கடமாகரியீருரி யாய்சரணம், விண்ணூடாவிழுதது‍ணைவாசரணமெய்ஞ்ஞானத லத்திறைவாசரணம்.

சங்கக்குழையாய்சரணஞ்சரணஞ்சங்கத்தலைவாசரணஞ் சரணஞ், கங்கைச்சடையாய்சரணஞ்சரணங்கங்கைத்தலைவாசர ணஞ்சரணம், பங்கத்துமைவாழ்பவனேசரணம்பங்கத்தெமை நீப்பவனேசரணம், வெங்கட்பணியாபரணாசரணமெய்ஞ்ஞான தலத்திறைவாசரணம்.

மணமார்தருவில்வவனத்தொளிருமணியேநினதாளுறும ன்பினரோ, துணிவார்சமுசாரவலைத்திரளைத்துணியாவடியேமு நின்பத்தியினற், பிணியார்சமுசாரநெடுந்திரைகள்பிறழும்பிற விக்கடலைகடவாத், தினியாரருள்வான்கரைசேரும்வகைசெ ய்யாய்சிவசங்கரவென்றனரால்.

இந்தப்பிரகாரம் இருடியரொழுபதின்மரும், ஆணவமலியி னைக்கெடுத்துப் பொருள்களுளுயர்ந்தபொருளாகிய பெருமான் திருவடிநீழல் புகுமாறு உருகியவன்போடு துதிசெய, அவர்க ளது மனவுண்மையையறிந்த உமைபாகர் அவாகட்குத் திரு வருளுபதேசிக்கத் திருவுளமாயினர். அடாந்த சிறைகளையு டைய அன்னமானது ஆகாயத்தில் தடைப்பட அதனுல் பிர மன் இப்பூவாளூருக்கு மேவி அவ்விடத்தில் வழிப்பட்டுக் கொண்டிருந்த இருடியரோடுகலந்து வேள்விடை முடித்தலும் அவர்கட்குச் சிவபெருமான் மான்மழுசதுாபுஜ காளகண்ட திரிநேததிரராய்க காட்சிகொடுத்தசரிததிர மீது இனிமேல்

அவர்கள் பெருமானிடத்து ஞானம்பெறும்விதமுணர்ந்துவன் உணர்மினெனச் சூதர் உரைசெய்ய வாரம்பித்தனர்.

பிரமன்வரவுச்சருக்கமுற்றிற்று.

---

## ஞானவுபதேசச்சருக்கம்.

மாதவர்களாகிய வெழுபது முனிவர்களுக்குச் சிவபெருமான் மேன்மைதங்கிய பரஞானத்தை யருளுதற்கு விரும்பினதை, அப்பெருமானது திருவடியன்றி வேறுபற்றில்லாவிரண்டாவது சம்புவாகிய நந்தியெம்பெருமான் தனது திருவுளத்திற்றெரிந்து அவ்விடத்துப் பக்கங்களில்சூழ்ந்து நெருங்கியிருக்கும் பூதநாதர்களையும், தேவர்களையும், மற்றெவரையும், உடையவன் றிருவுளக்குறிப்பின்படி விலக்கிவிட்டனர். இருவினையொப்புவாய்ந்து நிற்கு மெழுபது முனிவர்கட்குஞ் சங்கரன் தனது திருக்கண்களால் தீட்சித்து அஸ்தமஸ்தகஞ்செய்து அவர்கள் சிரசில் திருவடிகளைச் சூட்டியருளினர். அங்ஙனமாகத் திருவருள் உதிப்பித்தலு மவர்கள் திகைப்பு நீங்கிநிற்க, விளங்கக்காணப்படுவதுங் காணப்படாதது மல்லவாய், ஒருகுணங்களு மோரடையாளங்களு மில்லையாய், மலரகிதமாய், ஒன்றாயிருப்பதாய், அழியாததாய், எண்ணிறந்த வான்மாக்களுக்குமறிவாய், சலிப்பற்றதாய், கண்டிக்கப்படாததாய்,இன்பசொரூபமாய், மாறுபட்டவர்கள் சென்று கூடுவதற்கரிதாய், வழிப்பட்டவர்கள்சென்று பொருந்துகைக்கு இடமாகியமுத்திநெறியாய், அணுவுக்கணுவாய் மகத்துக்குமகத்தாய்த் திகழ்கின்ற சிவமாகிய தன்னையும்; இலக்கத்திலுளவுபடுத்தற்கரிதாய், அஞ்ஞானமாகிய ஆணவமலத்தினாலே மறைப்புண்டு

கிடந்து, அவரவர்கட்குண்டான புண்ணியபாவங்கட் கீடான
தோர் உடல்களைப் பெருமான காருண்ணியத்தினாலே பொரு
ந்திப் பிரிவற்றுநின்று, அவ்வுடம்போடு கூடுகையினால் எண்
ணிறந்த போகங்களைப்புசித்து அந்தப்புசிப்பா லுண்டாகிய
இதாகிதங்களினாலே மீளவும் புண்ணியபாவங்களை யார்ச்சித்
துக்கொண்டதனால் இறந்து பிறந்து வருவதாய் அங்ஙனம்
வருகையில் அநாதியே யான்மாவை மறைக்கப்பட்ட ஆணவ
மலமானது பரிபவமவந்த வவதரத்துச் சிவனுடைய வருளி
னாலே ஞானமுண்டாகி மறைப்புநீங்கித்திருவடியிலே பொரு
ந்தியிடும் ஆன்மாக்களின் தன்மையையும், எண்ணிறந்த வான்
மாக்களோடுங்கூடி நின்று மறைத்துந் தானொன்றாயிருப்ப
தாய், ஆன்மாக்களுடைய பக்குவாபக்குவங்கட்குத் தக்கதாக
அவரவரிடங்களிலே மறைந்து நின்று அந்த வான்மபோதங்
களின் மீட்சியிலே நீங்குவதாயிருக்கிற தன்காரியமான வெ
ண்ணிறந்த சத்திகளையுடையதாய், செறிந்த விருளும் வெளி
யென்னும்படி நின்று ஆன்மாக்களுக்கே மறைப்புகள் செய்
வதாய், செம்பினுட்கூடியிருக்கப்பட்ட காளிதமானது அந்தச்
செம்புள்ளவன்றே யதனை மறைத்து உள்ளும்புறம்புங்கலந்து
வெட்டுவாய்தோறு நின்றாற்போல ஆன்மபோதத்தோடுங்கல
ந்து மறைந்து நிற்கிற அழியாத வநாதிமலமாய், ஆன்மாவின்
இச்சாஞானக்கிரியைகள சீவியாதபடி மறைத்து நிற்கும் ஆண
வமலத்தினியல்பினையும் அறிவீராக.

மாதவத்தீர்! நெருங்கிய அண்டங்கள் யாவுங் காரியப்படு
வதற்குமுதற்காரணமாக விருக்கு மாயையோசடம். ஆன்மாக்
களோ ஆணவம், கன்மம், மாயையென்கிற மும்மலங்களால்
மாறுபட்டு, சாக்கிரம், சொப்பனம், சுழுத்திமுதலியவவஸ்தை

களையுறுவர் ஆதலால் நாமே அவைகளைப் படைப்போம் சிவன், உருத்திரன், சச்சிதானந்தன், தேவேசன், பவன், பராபரன்,நிற்குணன் ,நின்மலன், பழையோன், நவையறுப்போன் என்று வேதங்களால் பிரதிபாதிக்கப்பட்டவனெவனோ அவனே நாமெனவறிவீராக; அண்டமெல்லா மணுவென்னும்படி பெரிதாகியும் அணுவே யண்டமென்னும்படி சிறியதாகியும் சர்வ வியாபகமாய் நிறைந்து சொல்லுதற்கருமையாயிருக்கும் அருளினாலல்லது அடைவதற்கரியனென்னுமியல்பினையுடையநம்மை யாருமறியார்கள் நும்போன்றோர்செய்கின்ற தவங்களுக்கிரங்கியருள இத்தகைய தடத்த திருவுருவெடுத்தனம எம்மையறிந்தவா எமது சிறப்புருவினையு மறிவர். அறிவில் மயக்கமுடையவர் இத்திருவுருவினையு மாராய்ந்தறியார்கள். பரிசுத்தம்பொருந்திய யோகமும், போகமும், மோட்சவீடும், வேதாகமங்களும், பிரமன்முதல்பிபீலிகைபரியந்தமுற்ற ஆன்மகோடிகட்குநடக்குஞ்சிருஷ்டி, திதி,சங்காரம், திரோபவம், அனுக்கிரகமுதலிய பஞ்சகிருத்தியங்களு மற்றையவும், நாம் திருவுருக்கொண்டால் உளவாம். கொள்ளாவிடி லிலையாம. இருண்ட ஆணவமலத்தினின்று நீங்கிய தெமதுருவம் முனிவரீர் ! தெருண்டபோர்மின் மாயையைக்கடந்த நாம் அசுத்தமாயையால் நடிக்கப்படும் ஆன்மாவாக வொருகாலத்தும் பொருந்தோம். மாயையாலாகிய காரியவுருவெல்லா மொருகாலத்து நிலையின்றியழியும், எம்முருவ மொருகாலத்து மாயாது. பிரம விஷ்ணுவா திதேவர்கள் அசுத்தமாயையில் தனுகரணபுவன போகங்கள் வாய்ந்தோா. அழியுந்தன்மையர் அவர்கள் ஒருக்காலும்பதியாகார். பிரமனும், விண்டுவும்போந்த சென்மங்களில் மகத்தாகிய தவங்களைச்செய்து சிருட்டித்தொழிலினையுந் திதிதொழிலினையு முறையே பெற்றனர்.

இவ்விரண்டு தொழிலுஞ் சங்காரகர்த்தனாகிய நமமையன்றி யவாகட்குப்பொருநதாது ஆன்மாககள் எண்ணிறந்தன, அவை யாணவததால் கட்டுப்பட்டன. பலகனமஙகளை யுடையன, மாயாசரீரத்தன. அநாதிமுததசித்துருவனுயிருப்பவனரனெனு நாமே, அநாதிபெதத முததசிததுருவாயிருப்பன வான்ம வர்ககம். அநாதிமுததனாகிய வெமதருளினால் அநாதிபெத் தர்கட்குள்ள அநாதி பந்தநீஙகி யனுபநதமுமடைக்கும். பளிங்கு போனறு ஆன்மாவானது சார்ந்தவண்ணமா யிருத்தலினாலு குற்றங்களினின்று நீங்க நாம் செறிததிட்ட மாயை கரும மிரணடினையுங்கூடிப் பிராரததுவததினை யனுபவிதது இறப்பு பிறப்புகளில் பொருந்திவரும். மறைப்பினைசசெய்யுமாணவத திலழுநதிய ஆன்மா கலையாதிததுவஙகளால் பரஞானமுற் றுக்கருமங்களைநடததி நானெனதென்று சகல கேவலப்பட்டு வேவ்வேறுருவடைநது சொர்கக நரகாதிகளில் சுழலும், மூல வாணவததி லானமா சுழலுமளவு மாயையுங கன்மமு மயக்கும் இம்மாயை சுததமசுத்தமென விரண்டாய்த் தனுகரண புவன போகமென நான்காகச்சாரும்.

சுததமாயையானது மலகன்மங்களோடு விரவாது சுதத காரியபபிரபஞ்சததிறகு முதற்காரணமாயிருப்பது. இமமாயை யின கீழடஙகி மலகன்மங்களோடுவிரவிச் சுததாசுத்தககாரியப் பிரபஞ்சத்திறகு முதற்காரணமா யிருப்பது அசுததமாயை. கருமமென்பது ஆனமாக்க ளெடுககப்பட்ட உடம்புகளுக்கு முன்னிலைககாரணமாய, பலவிதமான புசிப்புக்களை யுண்டாக குவதாய், பலபேதங்களா யிருப்பதாய், ஆன்மாக்கடோறுஞ் சென்று பொருந்துவதாய், மனத்திலும் வாக்கிலுங் காய த்திலுஞ் செய்யப்படு மியல்பினையுடையதாய, புததியிலே நிறபதாய, இருவினையான புண்ணிய பாவஙகளாய, சஙகாந

காலதது மாயாகாரணததிற் சென்று பொருநதுவதாய் நல்ல சாதி, தீயசாதி, தீரககாயுள், அறபவாயுள, நல்லபோகம பொலலாப்போகம் என மூன்றுவிதமாயிருப்பது. இஙஙனமூன்று மோரான்மாவிலே யநாதியே கூடியுள்ளனவாம். இப்புசிப்பு ஊழ்வினையாலல்லது உணடாகாது அது முன்பாாசசிதத வொழுஙகிலேயும் *வன்மை மென்மைகளுக கீடாயும்வரும. சூககுமகன்மம, அதிசூககுமகன்மம், தூலகனமமெனமூன்றும். அவை முறையே சஞ்சிதம பிராரததுவம் ஆகாமியமுமாம்.

சஞ்சிதமாவது அநாதிதொடுத்துச சனனநதோறு மாாச் சிததவினை புசிதது மிஞ்சியது ஆறததுவாவிலேயுங கட்டுப் பட்டிருப்பது. பயிா வினைஞனொருவன தன்முயறசியால விளைநத தானியததைச் சோப்பிததிருக்கும் களஞ்சியமபோலும்.

பிராரததுவமாவது சஞ்சிததததிலே சிறிது புசிககப்பட்ட வினை யொருசரீரததை யெடுப்பிததுச சாதி, ஆயுள், போகம் கொடுககும். களஞ்சியத்திலிருநது தானியததை யெடுத்தனுப வித்து வருவதுபோலும்.

ஆகாமியமாவது பிராரததுவம்புசிக்கையில் வநதேறுகிற புண்ணியபாவங்கள். அவையாவன மனோவாக்குக் காயஙகளின் றூ செய்யப்படு நற்றொழிலுந் தீததொழிலுமாம். களஞ்சியததினினறு மெடுத்தனுபவித்து வருஙகால் மறுபடியுங களஞ்சியங குறையாவண்ணம் விளைத்துப பூாத்திப் பண்ணிக கொளவதுபோலும்.

---

*ஒருவன் பனைவிததை மண்ணிலேநட்டான, பின்பு தெஙகுவைததான், பின்பு கத்திரிநட்டான், பின்பு கீரை விதைததான், கீரை பதினைந்துநாளையிலேயும், கததிரி யொரு மாததிலேயும், தெங் கைந்து வருடததிலேயும், பனை முப் பதுவருடததிலேயும் பலன்கொடுப்பதுபோலாம்.

இந்தப்பிரகாரமாகத் தேகத்தால் பலகன்மங்களைச் சம்பாதித்தும், கன்மத்தாற் பலதேகங்களைச் சம்பாதித்துங் கலங்கு வதல்லாமல் திருவாகிய மெய்த்தருளினைச்சேர்ந்து பேரின்பத் தினை மருவவறியாது மும்மலத்தினையடையும் உயிர்கள். அம்மலத்து உயிர்கட்கு இரங்கி அநாதிசிருட்டியில் நாமே இவ்வுலகமுழுவதிலு மிகுந்த சிறப்போடுங்கூடிய தலம், தீர்த் தம், மூர்த்தி யென்னுந் திருவுருக்கொண்டு அவரவர்கள் துன் பங்களைத்தீர்த்து நல்வழியருளும் சிவதருமங்கள் அபுத்தியினு லும் புத்தியினுலு மலிவித்துச் சரியைமுதலீரொட்டானு மும் மலங்களை நீக்குவோம்.

"புறத்தொழின் மாத்திரையானே நமது உருவத்திரு மேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு சரியை எனப்படும். இது சரியையிற்சரியை, சரியையிற்கிரியை, சரியையில் யோகம், சரியையில்ஞானம் என நால்வகைப்படும்.

பீஜமந்திரங்கூட்டாத மந்திராசமனம், விபூதிதாரணம், கரநியாசம், மார்ச்சனம், அகமருடணம், தாப்பணம் முதலிய வைகளை உணர்த்துவது **சரியையிற்சரியை.**

திருவலகிடுதல், திருமெழுக்குச் சாத்துதல், வில்வம் பாதிரி கோங்கு வன்னி கொன்றை புலிநகக்கொன்றை பொ ன்னுவிரை மந்தாரை சண்பகம் செருந்தி நெல்லி செவ்வந்தி நந்தியாவர்த்தம் மல்லிகை குடமல்லிகை தும்பை சிவகரந்தை மாசிப்பச்சை திருநீற்றுப்பச்சை செந்தாமரை வெண்டாமரை என்னு மரஞ் செடி கொடி முதலியவைகளில் உள்ளபத்திர புட்பங்களை எடுத்தல் அவைகளினுலே மாலை தொடுத்தல், சுகந்ததூபமிடுதல், திருவிளக்கேற்றல், தோத்திரம்பாடல், ஆனந்தக்கூத்தாடல், பூசைத்திரவியங் கொடுத்தல் முதலிய வைகளை உணர்த்துவது **சரியையிற்கிரியை.**

திருக்கோயிற் றிருத்தொண்டு செய்யுமிடததுச சதாசிவ மூர்த்தியுடைய திருமேனியை ஆசாரசத்தி முதல் சுத்தமாயை ஈறாயுள்ள அஙகித் தம்பவடிவமாகத தியானித்து, ஓர் கால் பாதாளததினும், ஓர்காற் பூமியினும, ஓர்கால் ஆகாயததினும், பிரதக்ஷணம் வருவதாகத் தியானிததல முதலியவைகளை உணர்த்துவது சரியையில்யோகம்.

மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளை வாயிலாகவுடைய ஐந்தாசைகளை அடக்குதல், மெய்யன்பு, தியானம், தவம், உண்மை, சிவாலயததையுஞ் சிவனடியாரையுஞ் சிவனெனககாணடல்முதலியவைகளை உணர்வது சரியையில் ஞானம்.

புறததொழின் அகததொழின் மாததிரையானே எனது அருவுருவத் திருமேனியை நோக்கிச செயயும் வழிபாடு கிரியை எனப்படும். அது கிரியையிற்சரியை, கிரியையிற கிரியை, கிரியையில் யோகம, கிரியையிலஞானம் என நால் வகைப்படும்.

பீஜமநதிரத்தோடு கூடிய மந்திராசமனம், விபூதிதாரணம், அக்கினிகாரியம், அங்கநியாச கரநியாசம், மார்ச்சனம், அகமருடணம், சிவகாயத்திரி பஞ்சாக்ஷரசெபம், உருத்திராக்ஷதாரணம் என்பவைகளை உணர்த்துவது கிரியையிற்சரியை.

புஷ்பம் திருமஞ்சன முதலிய உபகரணங்கள்கொண்டு ஆன்மசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுததி, இலிங்க சுத்தி, என்னும் பஞ்சசுத்திகளுஞ் செய்து, சிவலிங்கததின் பீடத்திலே சத்தியாதி சததிபரியந்த பதுமமாகிய சிவாசனம பூசித்து, அதன்மேல் இலிங்கததிலே *வித்தியாதேகமாகிய

*விததியாதேகமாவது பஞசகிருததிய உபயோகிகளாகிய ஈசானமுதலிய பஞ்சமந்திரஙகளினாலே சிரமுதலாகக்கற்பிககப்படும் சத்திசரீரமேயாம.

மூாததியையிெயாசஞ்செயது, அவவிந்தியாதேகத்துககுச சிவனு யுள்ள நிஷ்களரூபரும சருவகர்ததாவுஞ் சருவவியாபகருமாகும் பரசிவனுகிய மூாததிமாலோத துவாதசாந்ததநின்மேலே தியா னித்து       னே ிெயாசஞ்செயத விததியாதேகத்திலே ஆவா கிதது, "சுவாமீ சருவஜகததுக்கும் நாதரோ, பூசையின்முடிவு எதுவரையுமோ அதுவரையும் நீா பிரீதியுடன் இவ்விலிஙகத திலே சாநநிததியராயிரும" எனறு விண்ணப்பஞ் செயது பூசிதது ஸ்தோததிரம் பிரதக்ஷண நமஸ்காரம்பண்ணி முடித தலையுணாதநுஞ் சிவபூஜை கிரியையிற்கிரியை.

மேதாகலைமுதல் உன்மனுகலை ஈறுயுள்ள சோடசகலைக ளுள்ளே, மேதாகலை, அர்ககீசகலை, விடகலை, விநதுகலை, அர்த்தசநதிரகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாநதகலை, சததி கலை, வியாபினிகலை, வியோமரூபிணிகலை, அநநதைகலை, அநாதைகலை, அநாசிருதைகலை, சமஞ்கலை, எனனும் கலைக ளிலே தனிததனி அமைந்து கிடநத தததுவம் முதலியவை களை எல்லாம இருதய முதல் சமனுந்தம் வரையும சோபான முனறயாய அவ்வககால மாததிரையினுள்ளே கடந்துகடந்து சென்று, பஞ்சாக்கரத்தின் நாமாக்களிலே வைத்து, சமனுந் தே பாசசாலம் என்றறிந்து அவற்றைக் கழிததுவிட்டு, உன் மனுந்தே, பரசிவமெனக்கொண்டு சிவத்தைத் தியானித்து, பினபு தியானிப்போனுகிய தானும தியானமுந் தோன்ருது, தியானப் பொருளாகிய சிவமொன்றே விளஙகப்பெறுவது கிரியையில்யோகம்.

நாபியினடியைச்சார்ந்த கிழஙகே பிருதிவி தத்துவமாக வும், கிழங்குக்குமேலுள்ள எண்விரல் அங்குல அளவாயுள்ள நாளமே அப்புமுதலிய இருபத்துமூனறு தததுவஙகளாகவும், நாளத்துமுட்களே அமரேசன் முதல் சிகேதன் ஈறுயுள்ள

எழுபத்திரண்டு புவனங்களாகவும், நாளத்து நுனியிலும் பூவி னடியிலும் பொருந்திய முடிச்சு மாயை யாகவும், பன்னிரண் டங்குல விரிவினை யுடையனவாயுள்ள எட்டு இதழ்கள் வித்தி யாதத்துவங்கள் ஏழும் சுத்த வித்தை என்னும் ஒன்றுங்கூடிய எட்டுத்தத்துவமாகவும், அறுபத்துநான்கு எனப்படும் கேசர வடிவம் ஈசுரம் சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமாகவும், அக்கேசரங்களுக்குள் உள்ளதும் ஓரங்குல உயரத்தினதுமாகிய பொகுட்டு வடிவம் சத்தித்தத்துவமாகவும், அப்பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு பீஜவடிவஞ் சிவதத்துவமாகவுங் கற்பிக்கப்பட்ட இருதயபங்கயத்தை ஆசனமாக்கி அதிலே சசி நியாதி அட்டத்திரிம் சத்கலாரூபமாகக் கற்பிக்கப்பட்ட சிவ லிங்கப்பெருமானைக் கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொ றை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் அட்ட புட்பங்கொண்டு திருவைந்தெழுத்தால் அருச்சனைசெய்வதை உணர்த்துவது கிரியையில்ஞானம்.

அகத்தொழில் மாத்திரையானே என்னுடைய அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு, யோகமெனப் படும். அது யோகத்திற்சரியை, யோகத்திற்கிரியை, யோகத் தில் யோகம், யோகத்தில் ஞானம் என நால்வகைப்படும்.

விபூதி உத்தூளனம், பிரணவத்தினால் ரேசக பூரக கும்ப கஞ்செய்தல், கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிறர்மனை வியையும் பொதுமகளிரையும் விரும்பாமையாகிய ஆண்ட கைமை, இரக்கம், வஞ்சனை யில்லாமை, பொறையுடைமை, மனங்கலங்காமை, அற்பாகாரம் சுசியுடைமை என்னும் இய மம், தவம் மனமுவந்திருத்தல், கடவுளுண்டென்னும் விசுவா சம், பாவத்துக்குப்பயந்து தேடியபொருளைச் சற்பாத்திரமா

யுள்ளவருக்குக் கொடுத்தல், தன்னின் மூத்தோரைவழிபடுதல், உயிர்க்குறுதிபயக்கும் உண்மை நூல்களைக் கேட்டல், குலம், செல்வம் அதிகாரம் முதலியவைகளினாலே கொவமின்றி யடங்கி யொழுகுதல், தக்கனவுந் தகாதனவும் பகுத்தறிதல், செபம் விரதம் என்னு நியமம், முதலியவைகளை உணர்த்துவது **யோகத்திற்சரியை.**

பதினாறுமாத்திரையளவுக்கு வாயுவைப்பூரித்து, அறுபத்திநாலுமாத்திரையளவுக்குக் கும்பித்து, முப்பத்திரண்டு மாத்திரை யளவுக்கு ரேசித்தல், பிரணவத்தை உச்சரித்துவாயுவை உள்வாங்குதல், இருபத்தொராயிரத்தறுநூறு வாயுக்களைத் தினவழியிலே குறைத்தல் இரணடுநாசியினாலும் வாயுவைப் பல்காலுள்வாங்குதல், புருவமத்தியிலே தியானித்தல், வாயுவைக் கபாலத்தினின்றுந் தோன்றி ஒடுங்கினதாகத் தியானித்தல்; வாயுவையடக்கிக் கன்னமூலத்தால் விடுதல், உடம்பை பூரிப்பித்தல், வாயுவை எப்போதும் மேனோக்கிச் செலுத்துதல், சித்திரநாடி வச்சிரநாடி சுழுமுனாநாடிகளிலே வாயுவைச்செலுத்துதல், உபாயத்தால் வாயுவை ஏறறல், பிரமரந்திரந் திறப்பித்தல், பிரசாதவழியிலே வாயுவைச் செலுத்துதல், நீர உதிரம் முதலிய தாதுக்களை அடக்குதல் முதலியவைகளை உணர்த்துவது **யோகத்திற்கிரியை.**

உச்சுவாசம் நிசசுவாசம் இரண்டையும் அடக்கி, சுழுமுனைமார்க்கத்திலே பிராணவாயுவை நிறுத்தி, விஷயங்களின் வழி மனதைச் செல்லவொட்டாமல் திருப்பி, ஒருகுறிப்பிலே நிறுத்தி, மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என்னு மாறுதாரங்களின் அந்தர்மாதிருகாக்கிரமத்தை அறிந்து, அவ்வவ்வாதாரங்களின் அதிதேவதை

களைத் தியானித்து, அவ்வாறுதாரங்களினும் அசபாசத்தி ஒவான்மிகையாய் நிறகும் முறைமையைப்பாரத்து, மூலாதா ரந்தொடங்கி விநாயகா முதலாகிய தேவதைகளைப் பொருந்தி, அபிமுகம் பண்ணிக்கொண்டு ஆறுதாரத்துக்கு மேலாகிய பிரமரந்திரமளவும் அசபையுடன்சென்றணைந்து, அந்தப் பிரம ரந்திரத்திலே அதோமுகமாய்ச் சகஸ்ரதளமாயிருக்கிற தாமரை முகையைச் சோதிசோதி பதோச்சாரணத்தாலே உதிக்குஞ் சிவார்க்கனாலே அலரச்செய்து, அந்தத்தாமரைப்பூவின் கேச ராக்கிரத்திலே உள்ள சந்திரமண்டலத்தை ஆகுஞ்சனஞ் செய் தலினாலே மூலாக்கினியை அக்கினிபீசாக்கர உச்சாரணத்தினா லே எழுப்பி, நாடிச்சக்கரத்தைப்பேதித்து, அவ்வக்கினியினா லே சந்திரமண்டலத்தை இளகப்பண்ணி, அந்த அமிர்தத்தைச சர்வநாடிவழியாக நிரப்பி அவ்விடத்திலுண்டாகிய சுகோ தயத்தில் அந்தமயமான ஞானாமிர்தாவத்தையை அடைந்து நின்று, சோமசூரியாக்கினிப்பிரகாசாதிகளாகிய பிரத்தியேகப் பிரகாசங்களெல்லாஞ் சூரியோதயத்திலே நட்சத்திராதிப் பிர காசங்கள் அடங்கினாற்போலத் தன்னிடத்தடங்கச் சாவதோ முகமாய்ச் சுவயப்பரப்பிரகாசமாய் இருக்கின்ற பூரணப்பிரகா சத்தைப் பாவிப்பதை யுணர்த்துவது **யோகத்தில்யோகம்.**

பிருதிவியைத் தியானித்து வச்சிரகாயம்பெறுதல்; சலத் தைத்தியானித்து வாயுபவனங்களை ஒடுக்கி நீரிலே நடத்தல நிற்றல் கிடத்தல் செய்தல், தீயைச்தியானித்துக் கபாலத்தை வெடிக்கச்செய்தல், சரீரத்தை வெந்த புரிபோலாக்கல, தீயி லே நிற்றல் இருத்தல் கிடத்தல் செய்தல்; வாயுவைத்தியா னித்து, காயத்தோடு ஆகாயத்திலே பறத்தல் பரகாயப்பிர வேசஞ் செய்தல், ஆகாயத்தைத தியானித்துச சரீரம் உயிா

அறிவு முதலியவைகளைச் சூனியமாக்கி அணிமா மகிமா முதலிய சித்திகளைப் பெறுதல். புருவமத்தியிலே கண்ணொளி மின்னொளி விந்துவொளி உள்ளொளி முதலியவைகளைத் தியானித்தல், விந்து நாதங்களைத் தியானித்து ஒடுங்கிய விடத்துக கடல் மணி முதலியவைகளின் தொனியைக்கேட்குதல்; என்பவைகளை உணர்த்துவது **யோகத்தில் ஞானம்.**

புறததொழில் அகததொழில் இரண்டுமின்றி அறிவுத தொழின் மாத்திரையானே உருவம் அருவுருவம் அருவம் என்னு முததிறத்திருமேனிகடந்த அகணடாகார நித்தவியாபக சச்சிதானநதப்பிழம்பாய் நிறைந்துநின்ற என்னிடத்துச் செயயும் வழிபாடு ஞானமெனப்படும். ஞானம் ஞானத்திறசரியை, ஞானததிற்கிரியை, ஞானததில்யோகம், ஞானத்தில் ஞானம் என நால்வகைப்படும்.

எவர்களாலும் அறிதற்கரிய சிவபெருமான் நம்பொருட்டுன்றே திருமேனி கொண்டெழுந்தருளினு ரென்றறிந்து, வேடத்தானும், சிவோகம்பாவனையானும், பிராசாதயோகஞ் செய்தலானும், சிவத்தோடு இரண்டறக்கலந்து நிற்கும் தன்மையானும், திருவேடமுடைய மெய்யடியாரையுஞ் சிவலிங்கப்பெருமானையும், கண்களிலேநின்று ஆனந்தபாஷ்பம் பொழிய, மொழிகுழற, உண்மையுணர்ந்து, வழிபடுதலேஉணர்த்துவது **ஞானத்திற்சரியை.**

பிருதிவியாதி தத்துவங்களைச சடமெனக்காண்டலாகிய பூதசுத்தியும், திருவருளானன்றி அங்ஙனம் ஆன்மா அறியாதெனக் காண்டலாகிய ஆன்மசுத்தியும், கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றன வெல்லாந் திருவருளெனக காணடலாகிய திரவிய

சுததியும, திருவைநதெழுத்தைச் சிவமுன்னுகக கணிததலா கிய மநதிரசுததியும், யாண்டும் நீககமற வியாபிதது நிறகுஞ சிவபெருமான இவ்விலிங்கத்தினும உளா எனககாணடலாகிய லிங்கசுததியுமாக ஐநது சுததியுஞ செயது வழிபடுதலை உணாததுவது ஞானத்திற்கிரியை.

யான் எனதென்னுஞ செருக்கற்றுச் சிவனுடனுய ஆன் மாநிற்றலையும், அதுபறறி வினை நுகாசசிப்பும் ஆாசசிப்பும் ஆன்மாவுக்கிலலையாதலையும், அதுபறறிக குறறமகலுதலையும் உணர்த்துவது ஞானத்தில்யோகம்.

அஞ்ஞானிகளாயினோர் மருண்மேலீட்டினுலே சிவம முற்றுந தோன்றப்பெருது பிரபஞ்சவாசனையோடு நிற்கு நிலை போல, சிவஞானிகளாயினோா அருணமேலீட்டினுலே பிரபஞ சவாசனை முற்றுந தோன்றப்பெருது நமமோடு அததுவித மாய் நிற்குநிலையை உணர்ததுவது ஞானத்தில் ஞானம் ''

கேவல சகலங்களைக் கீழ்ப்படுததிமேலெழுநது ஓஙகு முண்மைஞான மேவின சிலா என்னில் இரவில விழியென்ன நம்மோடு இரண்டறககலந்து சுததாததுவிதமுறுவா. சிலாநின் மலாவஸதை யைந்துற்றுவாழ்வா.தவத்தீர்! இவ்வுணமைகளை யறிமினென்று திருமூலலிங்கததுப்பெருமான் காநதருளினா.

அங்கு வந்திருந்த பிரமனு மறைநது தனது சததிய லோகம்போய்ச் சேர்ந்தனர். இனியகுதலையாகிய மழலை மொ ழியை வாய்நத குஙகுமசௌந்தரியோடு திருமூலநாதா தோ ன்றி யுணர்த்திய மெய்ஞ்ஞானத்தினையுணர்ந்த முனிவாகள் தேர்ந்து சிவானந்தசாகரத்தில் முழுகித்திளைதது வாழ்நதனர். பின்னர் முனிவர் தருமமே சொரூபமாகிய அபவிருதயாகத் தினை முடிததுப் பற்குனிநதியில் ஸ்நானஞ்செய்து நல்ல

நிறமவாய்ந்த வெண்பட்டு பூண்டனர். நிசளாபுரியென்னும் பட்டனத்தில்வாழும் சுதவாமவேந்தன் அவ்விடத்திற்கெய்தி அபிருதஸ்நானம் அந்நதியிற்செய்து முனிவரா மகிழ அந்தணர்கட்கு அபாரமான தானஞ்செய்தனன். அபிருதஸ்நானம் எந்நதியிற்செய்யினும் அந்நதியினீர மங்களகரமாகக் கங்கையைக்காட்டிலும் அதிகப்பயனைத் தருமென்னில் பற்குனிநதியில் அபிருதஸ்நானஞ் செய்தோர்க்குண்டாகும் பலனை யிவ்வளவென வெடுத்துச்சொல்ல யாவரால் முடியும். வேள்வியிலவிளைத்த மந்திரநெருப்போடு தத்தமிருக்கையையடைந்து ஆகமக்கிரமப்படி அரணியிற் கடைந்தெடுக்கும் அக்கினியிற் சேர்த்துப் பிரதிதினம் அக்கினிகாரியஞ்செய்து திருமூலநாதர் திருவடியில் தாக்கிய மனத்தையுடையவராய் முனிவரெல்லாம் பரவெளியில முயங்கி வருகையில் சிற்சிலநாள் சென்றபின்னர் நித்திரைசெய்தோர் கரத்தினின்று நழுவிய பொருளைப்போலத் தங்கள் செயல்களையெல்லா மொழித்துப் பேரின்ப மேலீட்டினால் கலங்காத அறிவினர்கள் தங்களிருதயத்திலெழும் ஞானக்கினியை யுள்ளத்திலொடுக்கித் துவாதசாந்த ஸ்தலமாகிய துரியாதீதத்தில் சிவபோகத்தோடு இரண்டறக்கலந்து சுத்தாத்துவித நிலையில் அசைவற்றிருந்தனர்.

முனிவரொழுபதின்மருக்குந் திருமூலநாதர் அருளிய மெய்ஞ்ஞான வுண்மையினை யினிதுதெளிந்தோம். இயற்கையாகவே தரும சொரூபராக விளங்கும் பெரியீர்! குளிர்ச்சி பொருந்திய கற்பகசோலையின் நீழலிலிருந்து தேவலோகத்தையாளுந் தேவேந்திரன் கனிந்த மனத்தினனாய்ச் சிவபெருமானை யருச்சனைசெய்தவித்தத்தைக் கேண்மினெனப் பௌராணிகா பகரலுற்றனர்.

ஞானவுபதேசசருக்கமுற்றிற்று.

# இந்திரனருச்சனைச்சருக்கம்



அரிய தவசொரூபியாகிய பிருகுமுனியானவர் காத லோடு பெற்றெடுத்த வழகிய மாதவனாகிய சிவனனென்னு முனிவர இமயமலைச்சாரலையடுத்த வொருகானத்திற் பெரிய தவத்தினைச் செய்துகொண்டிருக்கையில் அவரது புண்ணிய ரூபமாகிய வுடம்பெல்லாம் புற்றுமூடியது. பிரகாசமபொருந் திய நிறத்தினைவாய்ந்த தளிர், மலர், காய், கனி பலநிறைந்த விருட்சங்களும், கொடிகளு மவனைசசூழ்ந்தன. இந்நிலையில சிவனனென்பவர், அவ்விடத்தமருங்காலத்தில் தனககு நிக ரிலலாத சையாதியென்னும் பெயரைவாய்ந்த வொரு மன்ன வன் தவத்தாலபெற்றெடுத்த மிக்க வழகினைவாய்ந்த சுகன்னி யென்பவள் ஒருநாள பற்பலபாங்கிகள் தன்னைச்சூழ்ந்துவரப் பட்டணத்தின் புறம்போந்து சிவனனென்னு முனிவரிருக கும் வனத்தினிலவந்து புட்பம் பறிததுககொண்டிருக்கையில் மூலலையாலும் இருவாட்சியாலுஞ் சூழப்பெற்ற வொருபுற் றினைக்கண்டு சமீபிதது இதற்கு ளெனனவிருககிறதென்று ஒரு சிறு துவாரததின்வழியே பாரத்தனள் அவ்வாறு பார்த்த துவாரத்தில் தவம் புரிநதுகொணடிருககுஞ் சிவனமுனியின கண்ணனது பிரகாசித்துக்கொண்டிருத்தலு மதனைச் சுகன்னி யென்பவள பொன்வண்டென நினைத்து ஒரு துரும்பினால சுறறிதோண்டினள். அப்படித்தோண்டிய மாத்திரதது யோ கஞ்செய்துகொண்டிருந்த முனிவரிங்ஙனஞ் செய்பவரியாவ ரென வுற்று நோக்குகையில் அழகுவாய்ந்த இரதிதேவியு மொப்பல்லவென்னும்படி மிகுந்த தேசசோடுங்கூடிய சுகன் னியைக கணடனா. உடனே அணைகடந்துபாய்ந்த சல

மென்ன அம்முனிவரது மனமுடைந்து குளிர்ச்சிவாய்ந்த கிரணங்களோடுங்கூடிய மூன்றாம்பிறைச் சந்திரனையொத்த நெற்றியினைவாய்ந்த சுகன்னியின்மீது விருப்பமூண்டுகொண்டது. மன்மதனு முடனே தனது புட்பபாணங்களை முனிவர் மீது தூண்டிவிட்டனன். குற்றமற்ற யோகத்தினின்று மனம் வேறுபட்டுப் பிழைப்பட்டதைச் சற்று மெண்ணுதவராகி அம்மாதினிடத்து நெஞ்சைச் செலுத்திப் பிழைப்பட்டன ரெனில காமநோய் யாவரால் வெல்லற்பாலது, தேகம்வற்றிய வராய், உணவு நீங்கினவராய், யோகத்தையுடையவராய் வாழ்ந்த மாதவனாகிய முனிவரோ காமநோ யுற்றனரெனில் எவர் காமசாகரத்தில் மூழ்காதவர். முனிவீர்காள்! மன்மதனது சரங்கள் பாய்ந்தமாத்திரத்து மையலால் மயங்கிய சியவனனென்பவர் வீரம்பொருந்திய வேலாயுதத்தையொத்த வாள்போன்ற கண்களையுடையவளாய்ப் பிரகாசிக்கின்ற ஆபரணங்களாலலங்கரிக்கப்பட்டிருக்கிற சுகன்னியின் கரத்தைப் பற்றினது பிளவுபட்டுக் கீழேவிழும்படி தனது கரத்தை நீட்டிப் பிடித்துக் கொண்டனர். சுகன்னியென்பவள்பயந்து, வளையலையணிந்த கரத்தைப் பிடுங்கிக்கொண்டு, மாலையுங்கூந்தலுஞ் சோர்ந்து விழ, நெற்றியினிடத்து வியர்வைவிட, அரையிலுள்ள மேகலையினின்று மணிகள்சிந்த, இரண்டுகாற் சிலம்புகளு மொலிக்க வோடித் தனது பாங்கிமார்கள் கூட்டத்திற்போய் விழுந்தனள். நடுங்கியவுடம்பினையும், வரண்ட நாவினையும், இமைகள் குவிந்துமூடிய விழிகளினையும், அடிக்கடிவிடும்பெருமூச்சினையும், துடிக்கு நெஞ்சினையும் பாங்கிமார்கள்கண்டு இவளமிகப் பயந்தாளென்று அதிசீக்கிரமாகக்கூடி மார்பின்மீது சாத்தி, தடவி, வஸ்திரத்தால் வியர்வை துடைத்து, மேகத்தைப் போற்பரவிய கூந்தலினைமுடித்து, சோர்ந்த குளிர்ச்சிபொருந்

திய முகததினுககுக காற்றுவரும்படி விசிறிகொண்டு மெள்ள விசுறுதலுங கண்ணைததிறநது பாாததுககொண் டிருநதனள்.

சுகன்னி யிந்தபபிரகார மிருக்கையில் இவள தந்தை யாகிய சையாதியெனு மரசன் தனது மனைவியாகள நாலாயி ரம்பெயர்த தன்னைசூழப் பூந்தோட்டமபோன்று சிறநது விள ங்கு அவ்வனத்தில் விநோத வேடிக்கையாகப் பெருஞ்சநதோ ஷத்தோடு பிடரிமயிாவாயநத குதிரையின்மீது ஏறிககொ ண்டுவநதனன். அதிகவேகததோடு செல்லும அககுதிரையி னின்று மிழிந்து வனததுளேகிச சிவனமுனிவாவாழும புற றெதிரே தோன்றுதலுந் திவ்வியந் திவ்வியமெனவோடி அதிக வன்போடிறைஞ்சி யெழுநது முனிவரது திருமுகததினைத தரிசிததுக கண்களினினறும வடியுநீரினைக்கணடு இவருக்கிங் ஙனஞ்செயதா ரியாவரொன்று சுற்றிப்பாாததனன். தனதுமக ளும் பாஙகியரு மொருஙகுகூடியிருநத கூட்டததைப்பாாதது, சகித்தற்கரிய துன்பததினை இம்முனிககுசசெய்தவர் இவர் களேயெனறு மனத்தில் நினைதது, காற்றினு மதிக விசையா கச்சென் றவர்களையடுதது, ஒவ்வொருவரையுந தனித்தனி யழைதது, இததகைய துன்பம் இம்முனிவருக்குச் செயதவர் யாரொன்று விசாரிக்க, பாஙகியர்கள ஒவ்வொருவரு மறியே மறியேமென்று சொல்லிப்போக, வில்லினையொதத புருவத் தினைவாய்ந்த சுகன்னி அதி சீக்கிரம்வந்து அடிபணிந்து எழு நது சொல்லுவாளாயினள். தந்தையே! செலலுகள் குடி கொணட நீண்ட புற்றினது ஒரு சிறுதுவாரத்தின் வழியே முனிவரது செவ்விய கண் தோன்றலும், அது பொன்வண் டென நினைத்து ஒருதுரும்புகொண்டு சுலவிததோணடினேன் அஙஙன மறியாமையால் தோண்டிய வென்கரத்தினை அம்

முனிவர் தனதுகைகளால் பிடித்தனா. யான் திகைத்துத தள்ளி வாசனைவீசப்பெற்ற கூந்தலைவாய்ந்த எனது பாங்கியர்கூட்டத்தில் அதிசீக்கிரமாகவோடிச் சேர்ந்தேன். நன்னெறிவாய்ந்த மனுவேந்தனுகிய என்தந்தையே இது நடந்தசங்கதியென்று உரைததனள்.

இதனைக்கேட்ட வரசன் அந்தோ! அந்தோ!! என்செயதாய்! என்செய்தாய்!! ஆயினுமாகுக இனிநீயஞ்சேலென்று பூங்கொத்துகள்பொருந்திய மலர்சூட்டிய கூந்தலையுடைய தனது புத்திரியை அவ்விடத்திலேயே நிறுததிவிட்டு முனியைச் சமீபிததுத்தொழுது எநதாய் என்மகள் அறியாமையாற்செய்த பிழையைப்பொருததருள வேண்டுமெனயாசிக்க, முனிவர்தனது கெடாதகவலைகளை யெல்லாம்விட்டுச்செப்புவாா. மன்னர்களுக்கு மன்னனே! நின்பெருமை பொருந்தியவுனது குமாரத்திசெய்தபிழையையான்பொறுக்கும்படிமிகவேண்டிகொண்டகன்னியை யெனக்கு விவாகஞ் செய்து தந்திடுவாய் அங்ஙனஞ் செய்யாயேல் நின்னையுஞ் சபிததிடுவேனென்று கூறிய மாததிரத்து, இலைபோன்ற வேலாயுதத்தை யேந்திய அரசன் கேட்டு, நானுய்ந்தேன் தேவரீர் சொன்னசெய்தியை யின்றே முடித்திடுவேன் என்று முனிவர்களுக்குமுடிமன்னர்களுக்கும் பரிசுத்தம்பொருந்திய யோகியாகட்கும், திருமு கமனுப்பி யாரையு மழைப்பித்துக் குளிர்ச்சிபொருந்திய புட்பந்தரித்த கூந்தலினையுடைய பெண்ணை முனிவருக்கு விவாகஞ்செயதளித்தனன். மிகுந்ததவத்தினை யுடையவனென்ன முனி மன்மதனது வஞ்சனையாகிய வம்பின் கோபரதினைத் தணிக்கும் பொருட்டுச் சுகன்னியை மணம்புரிநது வாழந்துகொண்டிருநதனா.

இந்தப்பிரகாரம் சிவனனென்னு மகரிஷியின இல்லறத்திற்கு உண்மைவாய்ந்த துணையாகிச் செய்யவேண்டிய பணிகளில் தலைமையாய் வெறுக்காத தேவாமிர்தத்தினையொத்த சுகன்னி வாழ்ந்துவருகையில் அவர்களிருக்குங் குளிர்ச்சிபொருந்திய கானகத்தினிடத்து ஓர்நாள் அச்சுவினிதேவர்கள்வந்து சேர்ந்தனர். அவர்கள் அங்கொருபக்கத்தில் நின்றுகொண்டிருந்த சுகன்னியைக்கண்டு, மன்மதனின் கணைகளால்மோதுண்டு குற்றப்பட்ட மனத்தினராகி, மாவிருட்சத்தில் வாழுங் குயிலினது ஓசையினைமருட்டு மழலைமொழியினையும், தேமற்படர்ந்த தனங்களையும், பெருத்ததோள்களையுமுடைய மங்கையின்கண் முன்னின்று சொல்லுவாராயினர். மாந்தளிர்போன்ற நிறத்தினையுடைய வணங்கேவருக சகலவழகினையும் வாய்ந்த நீ காந்தருவமாதோ? அழகுமிகுந்த கின்னரமாதே? இவ்வுலகமாதோ? தெய்வப்பெண்களைக்காட்டிலு மிக்க வழகினைவாய்ந்து ஏந்திய விளைமையான தனங்களையுடைய கொடியே சீக்கிரமுனைப்பாய் அழகிய குஞ்சிரிப்பினைப்பெற்ற சுந்தரியே மந்தகாசினியாகிய நீயார் வனப்புமிகுந்த வுன்னுடைய அரும்பின் மென்முலையை நோக்கிக்காமநோயுற்றுத்தளர்ந்தனம். அச்சுவினிதேவர்களாகிய நாங்கள் நீக்குவதற்கருமையாகிய நோயெங்களைவிட்டு நீங்கக கிருபைசெய்தருள வேண்டுமென்றனர். இங்ஙன மடங்காத பெருங்காமத்தாலுழைத்த அவர்கள் முகத்தைப் பாராதவளாய், சத்தியமான கற்பின்வழியளாய், தனது காற்பெருவிரலைநோக்கினவளாய்ப் புகலுவாள் தேவர்களே! நான் சையாதியரசனது மகள், சிவனனென்னுமுனிவரின் மனைவி, என்பேர் சுகன்னி, உம்மால் விரும்பப்பட்ட யான் உங்கட்குக் கிடைக்கக்கூடியவளல்லவென்றனள். வெறுத்த மொழிகளால் மறுத்துவிடவும் வெறற வுடம்பினராகி மாசுபட்ட மனத்தினரான அச்சுவினி

தேவர் சொல்லுவார். ஆரோக்கிய மடமாதே! உனது இளமை யினையும், சௌந்தரியத்தினையும், அழகிய எம்மிடத்தில் நிலை பெற நிறுத்தி மேவினாலன்றோ நீபெண்ணாய்ப்பிறந்ததனா லுண்டாம் பிரயோசனம். நரையெழுந்து, திரைவிழுந்து, அதிக வயோதிகமான முனிவனால் அரசன்மகளாகிய வுனக்கு ஆசை நிரம்புமோ. மலையினையொத்த தனங்களைவாய்ந்தவளே உன்னுடைய கற்பானது கெட்டுக் குறைவு அடையுமெனின் அவ்வாறாகாமைக் குபாயங்கேள்: பஞ்சபூத சம்பந்தத்தால்வந்த விந்த வுடலுக்கன்றி ஆன்மாவினுக்கு முறையென்பது கிடை யாது, இதோ நமக்குச் சமீபித்திருக்கிற தடத்தில் நின்னாயக னும் நாங்களிருவரு முழுகியெழுந்திருக்க மூவருக்கும் உரு வானது ஒக்கப்பிரகாசிக்கும், அப்போது எங்களுருமூன்றுள் உனக்கு விருப்பமுடைய ஒருவுருவைத் தழுவிக்கொள்வா யென்றனர். சந்திரன்போன்ற நெற்றியினைவாய்ந்த சுகன்னி யொன்றும் பதிலுரையாது திரும்பி அக்கினியின்முன்மணந்த தன்னாயகனுக் கெல்லாவற்றையு முரைத்தாள். சிவனமுனிவர் கேட்டு, தாமரையினையொத்த விழியினையுடைய மடவாய் இப் போது நான் துன்பமுடைய மூப்பினை யடைந்திருக்கின் றேன் இது நீங்கி இளமையான வுருவமடைவேனால் மற்ற வைப் பின்னாற் பார்த்துக்கொள்வோம் அதிசீக்கிரம் நீபோய் அத்தேவா சொல்லுக்கு உடன்படுவாய் என்று தன்மனைவியை முன்னே நடத்தித் தான் மெல்லப் பின்தொடாநது சென்ற னன். சுகன்னி இணங்கியதை யறிந்த தேவாகள் அவுதத்துறை கடந்து அறத்துறையிற்படிந்து தவததுறையில் நடக்கும முனிவரைக்கண்டு எதிர்நோக்கிச் சநதோஷித்துச சிவபுண் ணியத்தினை விளைவிக்குந்தீர்த்தத்தில் முழுகினாகள். புட்பங கள் நெருஙகி, மணிகள் நிறைந்து, பொன்தஙகிய அத்தடக

கனையில் மூவர்களும் எழும்பி தேவர்களும் வேறுவேறுபடுத தி க்கண்டுபிடித்தற்கரிய ஒரோவிதமான வுருவஙகளோடு காளைப் பருவமுடையவராய் விளங்கினார்கள். இவர்களைக்கண்ட சுக ன்னியென்பவள் என்னுடைய கற்பினுக்கு அழிவில்லாதிருக் குமாறல் என்னுடைய நாயகனே எனக்கு நண்ணுகவென்று மனதில் நினைத்துச் சிவனனென்னு முனிவரனையே ரூவிக் கொண்டனள். திவ்வியமாகிய இளமையானது திகழப்பெற்ற சுந்தரத்தைவாய்ந்த சிவனனும் அரசபுத்திரியாகிய சுகன்னி யுஞ் செம்பினையொத்த தனங்களும், வலிய தோள்களும் நெருங்கப்புல்லிப் பேரின்ப மடைந்தவனைப்போல ஆனந்தம் விளையவாழ்ந்தனர்கள்.

மண்ணுலகத்தரோயாயினு மிருக்த வறிவையுடையவர்தங கள் நிலமையினின்று பிசகாரோல் அவர்கள்நினையாத வெல் லாமவர்கட்கு வலியவந்து கிட்டும். விண்ணுலகத்தரோயாயினு நிலபிசுகுவரோல் எண்ணிய வெண்ணமொன்று முடியாது. அச்சுவினித்தேவர்கள் அவமானமடைந்து நாணமுற்றுத் தலை சாய்க்க அவர்கள் முகத்திலுண்டாகிய வாட்டத்தினைக்கண்டு தனது மனைவியைப் புறப்படுத்திவிட்டு முனிவர்அவர்கள் முக த்தினைநோக்கிக்கூறுவார். தேவர்கள்நோயினைத்தீர்த்திடும்வை த்தியர்களாகிய வானவரோ? எந்தனுக்கிளமைப்பருவத்தினை த்தந்த நும்நன்றியைமறவேன் நானிங்கு வேள்வியொன்றிய ற்றி அதில் சோமபானம் நீரடைந்திடும்படித் தருவேனென்று சொல்லி அவர்கள் மகிழ்வுறக்கூறிச் செயம்பொருந்திய வே லாயுதத்தையுடைய தனது மாமனாகிய சையாதியரசனை அழைத்து உனக்குப் பெரும்பயனுண்டாம்படி வேள்வியொன் றியற்ற விரும்பின மென்றமாத்திரத்து அவன்வேள்விக்குரிய

யாவுஞ் சேகரித்தனன். அநேகமான பெரிய முனிவர்கள் வந்துகூடினர், சிவனனென்னு முனிவரானவர் வேதாகமங்க ளிற் கூறியபடி சிவபெருமானுக்குரிய வேள்வியைநடதத வாரம்பித்தனர். இருவர்களாகிய அச்சுவினிதேவர்கட்கு ஒப் பற்ற அவிர்ப்பாகததை மிககதாதலோடு நியமித்த மரபினை அருவிப்போலப்பாயு மும்மதங்களையுடைய அயிராவதத்தை யா ரோகணிததுசசெல்லுந தேவேத்திரன் தெரிந்து, பிரகாசியா நின்ற வச்சிராயுதத்தை அதிசீக்கிரமாகக் கையிற்பிடித்து யா னையேறிப் பொன்னுலகத்தைவிட்டு மண்ணுலகில அறிவினில் மிகுந்த சிவனமுனிவர்நடததிடு வேள்விசசாலையினை நீண்ட முரசவாததியமெழத்தேவகூட்டடததோடுநெருங்கி, முனிவரை நோககிச் சோமசூரியாக்கினி நேததிரதாரியாந் தேவர்கட்கெல் லாஞ் சிகாமணியாய்வருஞ் சிவபெருமான் சந்தோஷிக்க நீர் செயும் பரிசுத்தம்பொருந்தியவேள்வியை நான்விலக்கிலேன், ஆயினுந் தெய்வலோகத்தில் தேவர்கள் மனைதோறுஞ்சென்று அவர்கள் கட்டளைப்படி யவர்கட்கு வைத்தியஞ்செய்துவரும் அச்சுவினிதேவர்கட்கு அவியுதவலொட்டேன். வேள்வியயற் றுமந்தணீர்! அச்சுவினிதேவர்கள் தேவர்கள் கட்டளைப்படி யொழுகுமொரு இழிவை யுடையவர்களன்றி இவ்வுலகத்தில் வாழு மானிடர்கட்குச் சமமானக் குற்றத்தையுடையவர்கள். அத்தகையினருக்கு நீவிர் அவிசு நியமித்துக்கொடுத்தலடாது. இவ்வுலகனைத்தினுக்குந் தலைமையினை வாய்ந்தவர்க்கே வேள் யிலவிர்ப்பாகங் கொடுத்தல் தகுதியாகும். பஞ்சேந்திரியங்க ளின் சேட்டைகளைக்கெடுத்த பண்ணவீர்! துன்பமெல்லா மொன்று குவித்துவைத்தாலென்னப் பெருந்துயரை ஒரு காலத்தில் நாமடைந்து ஒளித்து வாழ்ந்தனம். அககாலத்தில் பிளவுப்பட்ட சுவாலையோடு ஓங்கி எழுகின்ற எழுநாச்குகளை

யுடைய அக்கினிதேவனானவன் சுவைத்த நல்ல மொழியை நம்மைத்தேடிவந்து உரைத்தனன். ஆதலால் அவனங்ஙனநு செய்த வுதவிக்குக்கைம்மாறாக வேள்வியில் நமக்கருகிலிருந்து அவிர்ப்பாக முண்ணும்படி யேற்பாடுசெய்தனம் அதனைவிவர மாய்க் கூறுதுங் கேட்பீராக வென்றனன்.

விருத்திராசுரனென்னு மொருகிராதனைக கொன்றத னால் வருததமிகுந்த பிரமகத்திமருவ நாம் ஒருமடுவிலிருந்த வொரு தாமரையின் நாளத்திலொளித்துக்கொண்டு துன்பப் பட்டுககொண்டிருந்தோம், அப்போது விண்ணுலகத்தி னழ கானது நாயகனையிழநத நங்கையைப்போலும், கற்றவரில் லாத கழகததினை யொத்தும், குளிர்ச்சிபொருந்திய மலர்க ளில்லாத தடாகத்தினையொத்தும் விளங்கியது. அக்காலத் துத் தேவர்களெல்லா மொருங்குகூடி வானுலகத்தினைக்காக்கு மொரு வேந்தனில்லாவிடில் வளம்பெறாது என்று நாடி ஆயிர மசுவமேதயாகஞ் செய்தவனும் புத்திரபௌத்திர களத்திரர்க ளுடனே வாழ்பவனும், உலகமுழுவதினையு மொருகுடைக்கீ ழரசாட்சி செய்பவனுமாகிய நகுஷன்என்னு மரசனை இந்திர னாக நியமித்தனர். அவனவ்விடத்தரசாண்டுவருங் காலத்தில், தனக்குச்சமான மொருவருமில்லாத இந்திராணிமீது மோகி த்து, பசியவழகிய ஆபரணங்களைச் சுமந்து பிரகாசிக்கின்ற புலோமிசையைச் சமீபித்து உன்னிடத்தி லாசைகொண்ட னன என்பா லருள்செய்யவேண்டு மென்றனன். இதைக் கேட்ட இந்திராணி தனது மனதினிடத்தில் தந்திரங்கொண்டு துன்பமடையாதபடி சொல்லுவாள். அரசரேறே; இவ்விண் ணுலகத்தினை அரசாள்பவரெவரோ அவரே யெனக்கு நாயக ரென்பது நிச்சயம் ஆயினும் என்பால்வருகையில் பட்டத்து

யானையாகிய அயிராவதத்தின்மீதும், அனேகமான தவங்கள் செய்த மகாதவர்களாகிய எழுமுனிவரர்களுந்தாங்க பல்லக்கின் மீதும் வருதல் முறைமையாகும் அல்லதூஉம் நானிப்போது ஒருவிரத மனுட்டித்துவருகிறேன் அதுமுடிய சிற்சிலநாள் செல்லுமென்று நலலவிதமாக மெல்லவோதி நகுஷனையனுப்பிவிட்டுத் தனது ஆசிரியராகிய வியாழகுருவையடுத்து வணங்கிக கும்பிட்டுச் செய்தியெல்லாம் விரிவாக வுரைத்து நின்றாள். வியாழபகவான்கேட்டுச் சசியே! பயப்படேல் அகததியா சாபத்தால் நகுஷன் அரசையிழப்பான் நீசெல்லுகவென்று கூறி அக்கினிதேவனைக்கூப்பிட்டு இந்திரன்வாழ்கின்ற இடத்தைக்கண்டுபிடித்து வாருமென்றனுப்ப அக்கினியு நம்மைத் தேடிக்கண்டுபிடித்து நகுஷனது முயற்சியும் வியாழபகவான் சொன்ன சந்தோஷமுந் தெரிவித்தான். அவைகளைக்கேட்டுத் துன்பத்தினையடைந்த நாம் பின் சந்தோஷசெய்தியால் களிப்படைந்து வெளியில்வர நகுஷனென்பவன் அகத்தியனைப் பணிந்து சசிசொன்னவற்றைச்சொல்லி யிரப்ப உடனேமுனிவர் சிவிகையைத் தாங்கச்சென்றான். நீர்க்குமிழினையொத்த மோகத்தினை விரும்பிப் பெரியோரைப் பணிகொள்ளும் அற்ப வுள்ளத்தானாகிய நகுஷன் அம்முனிவர்கள் செயலை திருவருளென்றெண்ணாது அதிசீக்கிரமாகச் சசியினிடத்திற் செல்லும் படி சற்ப! சற்ப!! வென்றான் அக்கணமே அகத்தியர் கோபங் கொண்டு நகுஷனைநோக்கிச் சற்பவென்ற நீ சற்பமாகப் போகக்கடவதெனச் சபித்துவிட்டனர். இதுசெய்தியை நாங்கேட்டு உடனே நமது லோகத்திற்குச்சென்று செங்கோலோச்சி வாழ்ந்து அக்கினிபகவானுக்கும் அவிர்ப்பாகமுதவினம். யாகத்தில் நடத்தும் அவ்விய கவ்வியங்களனைத்திற்கு முதல்வன் யாமே. செவ்விய முனிவீர்காள்! நமக்கு மாறாகவந்த நகுஷன்

முனிவரால் சபிக்கப்பட்டதுபோல நீவிரும் அச்சுவினிதேவர்கட்கு அவிர்ப்பாகமீயின் சபிக்கப்படுவீரொன்றனன்.

இந்திரனிந்தப்பிரகார மிக கருவத்தோடு சாற்றியமாத திரத்து முனிவர்கள் அஞ்சிய மனதையுடையவராகச சிவனரென்னு முனிவர் இந்திரனைநோக்கிக் கூறுவர். புகழோடுங் கூடி அந்தணர்கள் சாபத்தால் நகுஷன் சாபமேற்றனனென்று கூறினும், உடனே! அம்மொழியினைமறந்து அவிர்ப்பாகங்கொடுக்க எங்கட்கதிகார மில்லையென்று பொங்கிப்பொங்கிப் புகலுகின்றாய், எங்களுடையவாககினால் இப்போதே அந்த நகுஷனுக்கு நீ சோதரனும்படி செய்வது சததியம்.

சூரியனுடைய கிரணத்தில் பிரகாசிக்கு மக்கினியினது விரிந்த வேள்விச்சுவாலையினால் நிலைபெறு மரசினையுடைய நீ தண்டத்தினை விறுதிசெய்வாய். நல்ல அந்தணர்கள் தங்கள் சரதமாகிய வாக்கினால் தகிப்பர். ஆலகாலவிடமானது தன்னைகலந்த வுயிரொன்றினையே கொல்லும், வாளாயுதமானது தன்முன்னெதிர்த்த வொருவனையே சங்கரிக்கும், வேதியர்கள கோபத்தீயானது எல்லாவற்றையு மேககாலததிலே தகித்துவிடும். இப்பெருமை பொருந்திய வையகமானது தருமங் காரணமாகத் தழைததிருக்கும், அத்தன்மத்தினை வேதமானது விசிதமாகப்பேசும், அவ்வேதமானது பெருமை பொருந்திய வேதியர்கள் வசத்தது. அத்தகையராகலின் வச்சிராயுதத்தையுடைய இந்திரனே! வினையினின்று நீங்கிய பிராமணர்கள் யாவருந் தங்கள் மனத்தின்கண்ணே தியானித்து நன்மையடையும்படியான தேவாகளேயாவர். தேவர்காவலனே! நினக்குண்டாயிருக்கிற செல்வச்செருக்கினால் பெரியோரை மதித்துப்பேச வறிந்தாயில்லை உன்னுடைய வல்லமையாலாவ

றென்னவிருக்கிறது. நீ அடையவிருக்கிற துன்பத்தினையறிந் தாயிலலை மிக நன்றியினைவாய்ந்த அச்சுவினிதேவர்களை நாம் வளர்க்கும் வேள்வியினின்று அவிர்ப்பாக மேற்றுக்கொள்ளுங் களென்று சாற்றினேமிதைத்தடுக்கவல்லவர்க ளியாரிருக்கின் றனர் நாமவர்கட்குக்கொடுப்பது நிச்சயம். என்றிந்தப்பிரகாரங் காமாதிகள்கடந்த முனிவரராகிய சிவனர் பலவுறுதிமொழி களைப்பேசி அச்சுவினிதேவ ரிருவர்கட்குச் சோமபானமடை யும்படி ஒளிபொருந்திய இந்திரன்காண அவன்முன்னிலையில் வழங்கினர்.

பெருமைபொருந்திய மிக்க தவத்தினையுடைய சிவன முனிவர் அச்சுவினிதேவர்கட்கு அவிர்ப்பாகங் கொடுத்தமாத் திரத்து, இந்திரனவன் ஊழித்தீயெனக் கோபித்து இடபக் கொடியினைவாய்ந்த இறைவன் வேள்வியையழித்து இம்முனி வனுயிரையுமுண்டு போவதேயன்றி விடேனென்னத் தனது வெண்மை நிறம்பொருந்திய ஐராவதயானையைச் செலுத்தி வச்சிராயுதத்தைச் சுழற்றிவிட்டு நின்றான் மாதவர்கள் இவர் கண்டுபயந்து ஆசீர்வாதஞ்செய்தனர். வேள்வியின்முன்னே ஆண் சிங்கத்தையொத்து விளங்கிக்கொண்டிருந்த சிவன முனிவர் தன்னை நோக்கிவருகின்ற வச்சிரப்படையைப் பார் த்துக் கோபித்தமாத்திரத்துக் கற்புடைய மாதர்கள் நேத்திரங் களைக்கண்டு பயப்படும் காமுகர்கள் நெஞ்சினைப்போல, அப் படையானது ஆகாயத்திலேயே நின்றுவிட்டது. இவ்வுலகமுழு வதினையுஞ் செயித்து நடுங்கும்படிச்செயுஞ் செயத்தினைவாய் ந்த வச்சிராயுதம் வீணாய் விட்டமாத்திரத்தில் அயிராவதப் பாகன் தனது சந்தோஷமும், ஆண்மையும், வீரமுங் கெட்டு வெட்கமடைந்து நின்றனன். அவ்வாறு நின்றவனைச் சிவன

முனிவர் நோக்கி யுரைப்பார். தேவர்கள்சூழ விண்ணுலகத்தி னுக்குத் தலைமைகொண்டு வாழு மாண்மையும், சகல போகங் களும்பொருந்த வனுபவிக்கின்ற செல்வமுங்கொண்ட பே தையாகிய மகவானே! ஒப்பற்ற வாணையினாலே சிவபெருமா னது திருவடிகளை வணங்குஞ் சிவனடியார்க்கபராதம் விளைத் தனை. அப்போகங்கள் யாவு நின்னைவிட்டுப் போகக்கடவது என்று சாபமிட்டனர். உடனே ஆகண்டலன் தனது செல்வ மும், வலிமையும், அணிகளும், உடைகளுந் தேகவொளியு மிழந்து இளைத்தனன். விண்ணுலக முழுவதினையு மொரு குடைக்கீழ் யாண்டுவந்த சதமகனே யித்தகைய நிலையை யடைவனேல் ஆராயுமிடத்து அழியாத பொருளும் வலியு மிவ்வுலகத்திலுண்டோ யில்லையில்லை.

அந்தோ? பொறுமைகொண்ட புரந்தரன் இந்தப்பிரகாரந் தரித்திரத்தால் மிக்க மெலிவடைந்து துன்பத்துடனே சில நாள் கழித்துப் பின்னர் அதிகச் சிறப்பினைவாய்ந்த தனது குருவாகிய வியாழபகவானது திருவடிகளை வணங்கித் தனது குறைகளையெல்லா மெடுத்துச் சொல்லித் தன்னைக் காக்கும படிவணங்கி நின்றான். இதனைக்கேட்ட குருவானவர் இந்திர னுக்குவிளைந்த சாபத்தினையும், வேந்தனுரைத்த மொழியினையு மாராய்ந்து மொழியலுற்றனன் தேவர்கட்கரசே! சாபத்தி னாலே மிகவுந்தளரேல் பூர்வசென்மத்திற்செய்த வினைவந்து வளைந்து கொண்டால் இவ்வுலகில் அதனை யனுபவித் தேமாற் றல்வேண்டும். இச்சென்மத்தில்வந்து இப்போதுனக்குண்டா கிய வினைக்குக்காரண முன்னமே செய்துக்கொண்டிருக்கி றாய். எவர்களெந்தக் கருமத்தை முடித்தார்களோ அதே கரும மவர்கட்குப் பயனாகிவரும். வீணேவிசனப்படுவதினா லென்ன

பயன், நீ பூர்வததில்செய்த வினையும் அது தீரும் வழியுஞ் சொல்லுகின்றோம் கேட்பாயாகவென்று சொல்லத் தொடங்கினர்.

இதங்களையேசெய்து சந்தோஷிக்கின்றவனும், மயக்கததை ச்செய்கின்ற ஐம்பொறிகளை வென்றவனும், கோபமாதி கடந்தவனும் உதங்கனென்னும் பெயரைவாய்ந்த வொரு வுத்தம முனியிருந்தான். அவன் அதிக விசாலமபொருந்திய நீழலைச் செய்யாநின்ற வொருபலாமரத்தி னடியிலிருந்து சகல வரங்களுந் தழைத்திடுந் தேவலோகத்தி லுள்ளது மூப்பை நீக்குவதுமாகிய அமுதத்தைப்பெறவேண்டி மிகுந்த தவத்தினை ச்செய்தனன். அந்த வரியதவத்தினது நெருப்பானது எழும்பி யெங்கும்பரவி ஆகாயத்தினையுந்தகிக்க, சகிக்கலாற்றாது தேவர்களுன்றேடுகூடி விண்ணுலகை நீங்கிக் கயிலாசத்தினை யடைந்து ஆலமுண்டருள்செய்த வமுதனே, காலகாலனே, காமதகனனே, அடைக்கலம்! அடைக்கலம்!! உதங்கமுனிவனது தவத்தின் தீயால் சகிக்கக்கூடவில்லை, என்றுகூறி வணங்கிய மாத்திரத்து நமது சிவபெருமான் அவர்களை நோக்கி நடுங்கவேண்டாம் நும்பதிக்குச்செல்மின் என்று கட்டளையிட்டு உன்னைநோக்கி மாதவத்தினைச் செய்துகொண்டிருக்கு முதங்கமுனிக்கு இறப்பைக் கெடுக்கின்ற தேவாமுதத்தை யீந்திடுவாயென்றருளி மறைந்தனன். பின்னர் பெருமானை வணங்கிக்கொண்டு நீ திரும்பி அந்தப்பிரகாரஞ் செய்யாது வஞ்சனைகொண்டு ஒரு நீசவேடம்பூண்டு தேவாமுதத்தைத் தோலிலேந்திக்கொண்டு சிறிதுதூரத்திலிருந்து முனிவனை நோக்கித் தேவர்கட்குங் கிடைத்தற்கரிய தேவாமுத மிதோ வேந்தி நிற்கின்றேன் பெற்றுக்கொள்ளென்றாய். உதஙகன்

கண்டு யாரோ வொருநீசன் கள்ளுண்ட வெறியினாற் பிதற்று கின்ற னிவனுக்குத் தேவாமுத மெங்ஙனங்கிட்டுமென நினைத்து இவ்விடம்விட்டு அப்புறத்தேபோவென்று கரத்தாற்சுட்டியோட்டினான். உனது வஞ்சனை முடிந்துவிட்டதென்று சந்தோஷித்துப் பயப்படுவானைப்போல் நடித்துக்கொண்டேயோட்டம்பிடித்தாய், வேதமுழுது நன்குணர்ந்தவனாகிய வுதங்கன் பின்னர் அறிவினாலாராய்ந்து உண்மை தெரிந்து கொண்டு சொல்லுவானாயினான் சிவபெருமான் கொடுக்கும்படிக் கட்டளையிட்டதை மறுத்து வஞ்சனையால் வஞ்சித்த அந்தப்பேதையாகிய தேவேந்திரன் அந்தணர் சாபத்தினாலேவெந்து, பெருமையாகியசெல்வ முழுதுமிழந்து, வலியுநீங்கி வசசிராயுதமுங் கெடுவதாகவென்று கோபித்துரைத்தனன். அத்தகைய உதங்கன் சாபமானது நின்னைப்பின்தொடர்ந்துப்பற்றி நினது செல்வமாதி யனைத்து நீங்க வருத்தமுறச்செய்தது. தேவேந்திரனே குற்றமில்லாத வேதியர்களை யவமதித்து அன்பினறியொழுகிறவ னெவனாயினு மவனை யப்பொழுதே கெடுதிகளெல்லாஞ் சூழ்ந்துகொள்ளும். சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமனும், சங்கார கர்த்தாவாகிய நமனுங்கூடி அதிகமாக வைதாலும், மிகத்தாக்கினாலும், தேகத்தினுக் கிறுதிசெய்தாலும், எங்கும்படி சபித்தாலும், இவற்றை லட்சியஞ்செய்யாது அறிவினர்கள் வழிபட்டே நீக்கிக்கொள்ளுவா. தங்களுக்கொருவா தீங்கு செய்வரேல் அவரைக் கலங்கும்படி கோபித்தலும், வைதலும், தாக்குதலும், சாபங்கொடுத்தலுங் கொல்லுதலும் வேதியர்கட்கியல்பேயாம். ஆகையால் வேதங்களையாய்ந்த வந்தணர்களோதும் வாய்மொழி யொன்றினாலே இப்போது நீ துன்பமடைந்தனை இத்துன்ப நீங்குமாறு ஓதுவோ முவந்து கேட்பாயாக. அன்னமாகியும் பன்றியாகியுமுருக்கொண்டு அய

னரியால் தேடப்பட்ட நமது சிவபெருமான் பண்டைகாலத்தி லுண்டாகிய தேவர்கள் மரணத்தை நீக்கு மமுதத்தை மிகுதி கொண்டு அவ்விடத்து வாழுகின்றனன. அந்தககாரணத்தால் அதனை நினைத்து இனி அமுதத்தை யடையலாமென்ன நின் றால் வஞ்சிக்கப்பட்டபின்னு முனிவன் அவ்விடத்திலேயே யுறுதியாக வாழ்கின்ருன். நீரினுல்மிகுந்த சேற்றினை நீரினைக் கொண்டல்லாது மாற்றககூடாததுபோல வேதியராலுண்டா கிய சாபத்தினை அவர்வாக்காலலலாது ஒருக்காலு நீங்காது. ஆகையால்உத்தங்கமுனியினிடத்துத்தேவாமுதத்தோடுசென்று இதமான வார்த்தைகளைப்பேசி, சந்தோஷிக்கச் செய்வாய், மலாந்த கமலத்தை யாசனமாகக்கொண்ட இலக்குமியானவள், அலர்ந்த கடுக்கைமாலையினையுடைய கண்ணுதற்பெருமானின் திருவடிகளைப் பூசித்து நலந்திகழப்பெற்ற விஷ்ணுவினது மாாபினிலே வாழப்பெற்றனள அததலத்தினை யாவருந் * திரு மங்கலமென மொழிவா. அங்குவீற்றிருக்கும் பெருமானை மங்கலேச்சுர னென்றும், அமுதேச்சுர னென்றும் வழங்குவர். இனிமேல்வருந் துவாபரயுகத்தின் முடிவில் சைமினிமுனி வரானவர் அப்பெருமானைப் பூசித்துப் பலவரங்களைப்பெற்று ஏகமாகவிருந்து ஒலிக்குஞ சாமவேதத்தை ஆயிரஞ்சாகைக ளாகப்பிரித்துக் கருமகாண்டத்தினை மீமாம்சத்தினைக் கொ ண்டு நிச்சயித்த போகத்தினையும் மோட்சத்தினையும் விரும்பு வார்களின்பொருட்டு நன்கு விளக்குவார். அப்போது பலாவ னத்தி லெழுந்தருளும் நங்கடவுளுக்குச் சாமவேதீச்சுரனென்

* திருமங்கலமென்பது-பூவாளூர் நகரவீதிகளில் ஒன்ருய்ப் பூர்வத்திலிருந்ததென்றும், அவணோராலய முண்டென்றும், அதுவே இதுபோதுபிரிந்து வேருய்த்தோறறப் படுகினற தென்றுங் கூறுவா

றும், அத்திருமங்கலத்திறகுச் சாமவேத புரமெனவுங் கூறற மற வெடுத்தோதுவர் அத்தகைய தலத்தில முனிவா அருளி ஞலே பூசனைசெய்து, திருமங்கலத்தினுக்குக் கிழக்குத்திசை யில் வில்வவனத்தினைச்சார்ந்து விளங்கும் பூவாளூர் துலங் கும்படி பிரகாசித்தெழுங் கல்யாண சிகரத்தில் எழுந்தருளி யிருக்கும் ஒப்பற்ற கருணையே திருவுருவாயமைந்த திருமூல நாதனையும் பூசித்து, உன்னைத் துன்பப்படுத்துஞ் சாபத்தி னின்று நீங்கி வலியுஞ் செல்வமும் திருமூலநாதனருளாற பெற்று அந்நகரினுக்கு மேற்குத்திக்கிலுள்ள அருச்சுனவனத் திலடைந்து, எக்காலத்து நீங்கப்பெறாத செல்வத்தினை யடையவேண்டி குபேரன் பூசித்துச் சித்தியடைந்த சிவலிங் கப்பெருமானை வணங்கித் தெய்வலோகத்திறசென்று அதனை யாண்டுகொண் டிருக்ககடவா யென்ன வியாழப்புத்தேள் விளம்பினர்.

அருளினாலே யாசாரியரருளிய மொழியனைத்துங்கேட்டுப் புருகூதன் பெருகிய சந்தோஷத்தேக்க வவ்விடம்விட்டு நீங்கி அமுதத்தினையுங் கையிலேந்திப் வினைகளையெல்லா மோட்ட விளங்குந் திருமங்கலத்தினையடைந்து ஒப்பில்லாத உதங்க முனிவன் மகிழ்வெய்த முகமன் கூறியிருந்தான். முனிவன் தன்னையடுத்த அமராவேந்தனுக்குச் சோடசவுபசாரஞ்செய்து கொடுத்த வமுதத்தினை வாங்கிக்கொண்டு சொல்வான் குலி சாயுதத்தை யேந்திய கோவே கமலனுதியாகளாலே பூசிக்கப் பெற்ற சாமவேதீசசுரரிதோ விளங்குகின்றனர். இவரைப் பூசி த்து உத்தமமாகிய வில்வவனத்தில விளங்கும பறகுனிதீரத் தில ஸ்நானஞ்செய்து சிவலிங்கப்பெருமானை விதிப்படி பூசையாற்றி, சிவபெருமான கட்டளையைமீறிச்செய்த வஞ்ச

னையையும யானிட்ட சாபத்தினையுஞ் சிவன முனிவரீந்த சா
பத்தினையு நீக்கி வானுலகஞ்செல்வத்தினை யடைந்து முன்பு
போல் வாழக்கடவாயென்றனன். இந்தப்பிரகார உதங்கமுனி
வன விருப்பத்தோடு மனமகிழ்ந்து புகல வஞ்சனையைச்செய்த
வலாரி சந்தோஷித்துக காதலா மலகம்போலக் காட்சிதந்
தருளுங் கண்ணுதற்கடவுள கழலடியைப் பூசைசெய்தான்.
அவ்விடத்தில திருவருள்பெற்று, நீங்கி யழகிய பூவாளுளைத
தீங்கெலாமகலச சேர்ந்து, தெளிந்த பற்குனிநதியிலாடிக் கல
யாணநாதர் திருக்கோபுரத்தைத்தாழ்நது, கோயிலுட்சென்று
சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, சென்மாந்தரங்கள்தோறும்
விடாது தொடருமன்பிழுகக கற்பக்கிரகஞ் சமீபித்து, திரு
மூலநாதனைத தரிசித்து, சிறியேன் முழுதும் பிழைப்பட்
டேன் அடியேன் முழுதும் பிழைகளும்வண்ணந் திருக்கடை
க்கண்சாத்தியருள வேண்டுமென்று போற்றி அபிடேகாதி
திரவியம்பல சேகரித்து, வரமலிந்த புட்பலிங்கேசனையாட்டி
யருச்சித்து, பிரணவத்தோடுங்கூடிய பிழையற்ற சாந்தம்
யாந்தங்கூடிய திருமந்திரத்தினை உருத்திராக்க செபமாலை
யால் வேண்டுமளவுஞ் செபித்து, கோடிசூரிய ரேககாலத்தில்
கூடுவதினாலுண்டாகிய பிரகாசத்தோடு, கோடி சந்திரர்களின்
கூட்டத்தி லுண்டாகிய குளிர்ச்சி யடுத்துப் பொருந்தின
தென்ன மங்கைபங்கன் மேனியினையும், விடமமைந்த மிடற
றினையும், திரிநேத்திரத்தினையும், தத்துவச்சேட்டைகளைத
தகித்த சனகாதியர்கள் சூழ்ந்து கைத்தலங்கூப்பி யேத்துங்
காட்சியினையு முடையவனாக எண்டோளத்தனை வில்வமூலத்
தமர்நத வமலனை யாதுந்தோயா முத்தனை யனைத்துமாகு
முதல்வனைத தியானஞ்செய்துகொண்டு தேவேந்திர னின
றான். இந்திரனிவ்வாறாக எற்றிவருநாளி லோர்நாள சந்திர

சடாபாரத்தினையுடைய சங்கரன் சதமகனெதிரோ தோன்றிச், சாபமகன்றது சகல சம்பத்துடன், பழையபடி வாழக்கடவா யென்று திருவாய் மலர்ந்தருளினர். இமையவர்வேந்த னினி பிழைத்தேன்பிழைத்தேனென்று பலகால் வந்தனைபுரிந்து, சாலவலம்வந்து, கூத்தாடி, ஆனந்தபாஷ்பங்கணகளினின்றும் பொழிய,பலவினைகளும் விட்டோட பரமனைநோக்கிதோத்த ரிக்க வாரம்பித்தனன்.

கங்கையைச்சடையில்வைத்தகடவுளேசரணநதெய்வக்
கொங்குயிர்கடுக்கைமாலைக்குழகனேசரணம்பச்சை
மங்கையோர்பாகம்வைத்தவள்ளலேசரணநாயே
னிங்குனைச்சரணஞ்சார்ந்தேனென்பிழைபொறுத்தல்வேண்டும்

பண்டெலாமடியேனுலும்பங்கயக்கடவுளாலும்
விண்டுவிறுைமேனைவிண்ணவராலுநகண்டு
கொண்டிடப்படாதசிலக்கோலநோகாட்டுநீல
கண்டற்குத்தமியேன்செய்யுங்கைம்மாறுகாணிலேனுல்.

வளங்கெழுஞானத்தாலும்வரமலியோகத்தாலும்
விளங்கியகருமத்தாலுமெய்த்தவராதியோர்க
ளுளங்கொடுவழிபாடாற்றுமொருபெருங்கடவுணின்பாற்
றுளங்கலில்லாதவன்புந்துறுத்துதல்வேண்டுமென்றான்.

இந்தப்பிரகார மிந்திரன் கேட்டுக்கொண்ட பலவரங்களையு நல்கி யெமது பெருமான் மறைந்துவிட்ட மாத்திரத்துத திரி யம்பகன் திருவருளா லாகாயத்தினின்றும், வியாழபகவான, தேவர், குடை, கவரி, யானை, அரம்பையராதியர் சமீபித்து வர அனைதுங்கண்டு ஆனநதங்கொண்டு அயிராவததநினை நோககிச சொல்வான், தெளளிய திரைகளைவீசாநின்ற நீம

பாற் சமுத்திரத்தினின்று முண்டாகிய ஐராவதயானையே நம்மைச்சார நாம் வீற்றிருக்கும் சபையில ஊர்வசியானவள இல்லாதிருப்பாளாஞல் அச்சபை அழகுபெருது. வேதங்களை யெல்லாந் திருவாயமலர்ந்தருளிய நாவினிடத்துவாழப்பெற்ற மடந்தைக்கு இடங்கொடுத்த விரணியகருப்பனசபையில ஓர் நாள் நிருத்தஞ் செயதுகொண்டிருந்த ஊர்வசியானவள் மண ணுலகத்துப் புரூரவசுவென்னும் வேந்தனை விரும்பிய கார ணத்தால் விரிஞ்சனிட்ட சாபமேற்று அதனை விடுக்கத்தெண் ணீர்பபாய்ச்சல நீங்கப்பெருத காவிரிந்தித்தீரத்தில பலவண்டு பாடி ரீங்காரஞ்செய்யும் பாரிசாத வனத்தில தவஞ்செய்து கொண்டிருக்கு மவ்வூர்வசியை அழைத்துக்கொண்டு ஈங்குவரு வாயென்றனன்.

அதனைக்கேட்ட அயிராவதமானது அங்ஙனமே பாரிசாத வனத்திற் சென்று தவஞ்செயதுகொண்டிருந்த ஊர்வசியை அழைக்க அவள் அசைவற்று அருந்தவத்தால மௌனமாயிருந் தைக்கண்டு அவளைப்பெயர்க்கவெண்ணித் தனது தும்பிக்கை யால் பெருமூச்சினை யெறிந்து வளைத்து அலைத்து மலைத்துப் பிடித்தீர்த்து மூர்ச்சித்து விழுந்தது. அப்போதுதன்மீதிருந்த மணியானது சிதறிப பிரபஞ்சவாசனையொழிந்த ஐம்பொறிக ளைப்போல ஓசையற்றுப் பூமியில்விழுந்து எல்லாவுருவுந் தன ஒருவாய விளங்குஞ் சிவபெருமானதுசிவலிங்கசொரூபமாய விளங்கியது. எழுமுழமுயர்ந்து பெருத்திருக்கிற அயிராவத மானது ஊர்வசியோடு வந்து சேருமென வெதிர்பார்த்துக் கொண்டிருந்த தேவேந்திரன நடந்தவரலாற்றினை அறியாதவ ஞய இதுகாறுந் தாமதித்ததற்குக்காரணமெனனையென நினைந் தெழுந்து குளிர்ச்சிபொருந்திய ஆகாயமுகட்டினை அளப்பதற

கெழுந்தா லென்னவோங்கிய பாரிசாதவனத்திலுக்கேகி அயர்ந்து வீழ்ந்துகிடக்கும் யானையினது நலிவினைகண்டு, அங்கெழுந்தருளியிருந்த காருண்ணிய மூர்த்தியாகிய சிவலிங்கப்பெருமானைப் பூசனைசெய்து அப்பெருமானுக்கு அயிராவதேசசுரரெனத் திருநாமமிட்டுக் கந்தங்கமழும் பாரிசாதேசர் திருவருளால் வெள்ளையானையினது மூாசசையைத் தெளிவித்துத்தனது பிரமசாபத்தினையுமாற்றித் தவஞ்செய்துக்கொண்டிருந்த ஊர்வசியையு மழைத்துககொண்டு சிந்தைமகிழச் சிவலிங்கத்தினையும வணங்கிப்போற்றித் திரும்பவும் அருளுக்காதாரமாய்விளங்கும் பூவாளூராலயத்திற்குருகிப்பேரனபிற்பூசைசெய்து திருமூலநாதர் திருவருளால் தனது பரிவாரத்தோடு அழகுபொருந்திய மருதவனஞ்சார்ந்தான். அளகைநகரில் வீற்றிருக்கும் அரசன் பூசைக்கு அருள்புரிந்த வளமிக்குயாந்த கயிலாயநாதரை வந்தனை வழிபாடுசெய்து உளத்தின்கண்ணே பெருங்களிப்போடு பொன்னுலகம்புகுந்து இன்பப்புளகமரும்பச் சசியோடுபுணர்ந்து அரசாட்சி செய்துகொண்டிருந்தனன். நைமிசாரண்ணியர்களே! மகவான் பூசைபுரிந்ததனைச் சொன்னோம், இனி சாம்பசிவன்நேத்திரத்தால் சாம்பலாகிய சாம்பன் மறுபடியும் உருவம்பெறஇரதிதேவிதவஞ்செய்த வரலாற்றினை வகுப்பாமெனறு சூதமாதவன் தனதுளளினமுகமலர நவில்வாராயினர்.

இந்திரனருச்சனைசருக்கமுற்றிற்று.

---

## இரதியருச்சனைச்சருக்கம்.

முககண்ணுயகர்மீது முனிந்து செய்திருந்ததக்கனார்வேள்வியிற்கலந்திருந்ததேவர்களை வீரபத்திரக்கடவுளைக்கொண்டு

தண்டித்து மிகுதியாகவிருந்த பாவததினையும்போகக எமது பெருமான் தனது கருணையால் அழியாத வலலமையோடு இராககதர்கள் குலங்களெலலாந தழைககத தாரகனென்னு மசுரன் வானவர்களுக்கு வயிரியாய்த்தோன்றி அதிக கொடுமையாத கனுயப்பிரமவிஷ்ணுவாதி தேவாகளோடியுததஞ்செய்துதோற்கடித்துத தேவாகளைசசிறைபிடிததுககொணடுபோய்ததனககு இழிவானதொழில்களைசசெய்யுமபடி அடிமைகளாககி ஆணடுவந்தனன், அததாரகனது ஆணையைக்கடககச சததியறறவாகளாய் நாணமடையததக்க பலதொழிலகளைப் பிரதிதினமுஞ்செய்து வலியிழந்து சகிக்கமுடியாதவாகளாய அவ்வீராககதாகணகளிலகப்படாதபடி சிலரொளிததுத திரிந்தனர், இவருட்சிலா சதுர்முகக்கடவுளைச்சார்ந்து மலரடிபணிந்து நீக்குவதற்கருமையாயிருக்கிற வெங்களதுன்பத்தினை நீககியருளவேண்டுமென பலபலவாகத் தோத்திரிததுநின்றவருள இந்திரன் மொழிகுவான் நான்முகக்கடவுளே! அதிக புயபலபராககிரமததையுடைய தாரகன் வசததாகளாகி யெங்களவலியாவுஞ்சிந்தினம், அனேகமான வேலைகளுஞ்செய்து இளைததனம் அததாரகனுககுச் சமையற்செய்பவன் அக்கினிதேவன், சலஙகொணர்பவன் வருணதேவன், வீடுசுததஞ்செய்பவன் வாயுதேவன், வீடுகள்தோறும் பிரகாசிக்குந் தீபங்களை யேற்றுந தொழிலைவாய்ந்தவன் சந்திரன், பஞ்சாஙகஞ்சொல்லுந் தொழிலைப்பெற்றூ னெமதுகுருவாகிய வியாழபகவான் நாகநாட்டைக்காப்பாற்றிவந்த நான் அவுணாகோன் ஆஙகாங்கு செலலுந்தோறும் பின்னர்சென்று நாக்கானது வறண்டு உளந்தடுமாறிச் சேனையோடு சேவகஞ்செய்யுஞ்சேவகன், இததகைய கொடிய கன்மங்கள்பொருந்த நலிகின்றோம் என்செய்வோம் எங்களையெல்லா நல்வழியிலுச்சீவிக்கும்படிசெய்குவாய்எனறு

இருகண்களினும் நீர்சொரியநின்றனன் இரணியகருப்பனாகிய பிரமன் இவாகட்கெல்லாம் இனிதுவசனஞ்சொலலி அனுப்பி விட்டு மாரனுடனே அநதப்புரததிற்சென்று மொழிகுவாா ஈரஞ்சற்றேனுமிலலாத சருகுகளையுண்டு இனிய யோகஞ்செய்துகொண்டுவாழும் வீரமிகுநத முனிவாகளது பெருமை பொருநதிய மனததிலுள்ள தவவலிமைகெட வகற்றி அம்முனிவாகளை அழகிய மாதாகளோடு சேர்ப்பிக்கு மாட்சிமையையுடையவனே! கேட்பாயாக, அதிக ஆற்றலையுடைய தாருகாசூரனையழிககும் வல்லமையுடையவர்கள சந்திரசடாதரனாகிய சஙகரன் அருளு மிளையகுமாரராகிய வேலாயுதக்கடவுளல்லாமல் இவ்வுலகில் இதுகாறும பிறநதவர்களுமிலலை, இப்போது பிறந்திருப்பவர்களுள்ளு மில்லை, இனிப்பிறப்பாாகளுள்ளுமில்லை, அததகைய குமாரககடவுளவதரிக்குஙகொள்கைககு எதிஙகிலலை, வண்டுகள் ரீங்காரஞ்செய்யப்பெற்ற மாலையணிநத கூந்தலைவாய்நத அம்மையாராகியபாாவதி மேருசாரலில் தவஞ்செய்கின்றாள், மழுவாளியாகிய மகாதேவர் கைலையில்யோகததில் வீற்றிருக்கின்றார், தேவர்கள் பூனைவாய்ப்பட்ட கிளிகளைப்போல அவுணர்களாலே அவதிபடுகின்றனா, மூவர்கட்குமுதல்வனாகிய மூர்ததி உமையாளைமணந்து தேவரிடுக்கண்களைத தீர்ததருளுஞ சேவ்வேளாகிய சிவசுப்பிரமணியக்கடவுளைத தரும்படியான முயறசியைச் செய்யவல்லார் யாவரிருக்கிறாாகள், இன்பததினைப் புட்பபாணஙகளாலுண்டாககுந தலைமைத தன்மையைவாயநத உன்னைலலலாது வேறுயாருணடு, சததித துப்பெருகி இருகரையும்புரள வலைகளைமோதியோடும் நதியானது, இளமையானகனறுககுட்டி அலருமபடிததாய்ப்பசுவையடிததுககொணடு போமபோது அதனைததடுககாமல் கரையிலிருநது வேடிக்கைப் பாாத்துக்கொண்டிருககிறவர்கள்யாவரு

கரும் பாவமுண்டாகாது. அவ்வெள்ளத்திற்சென்று அதனைத் தடுத்து மீட்டுக்கொண்டுவருஞ் சத்தியினைவாய்ந்தும் அங்ஙனஞ்செய்யாது கரையிலே சும்மாயிருப்பார்களே யாமாயின் அவர்களையே பாவமடையும், பெருத்துத் திரண்டுபரந்து குளிர்ச்சிபொருந்திய முத்துமாலைகளைத்தரித்து இணைந்து, குவிந்த தனங்களையுடைய மாதர்களையும், எழுகைப்போலுந் திரண்ட தோள்களையுடைய புருடர்களையும் ஒன்றுய்ச்சேர்ப்பித்து அவர்களுக்குக் கலவியினைவிளைவிக்கும் வல்லமை உன்னிடத்திருப்பதால் கருமபுவில்லினையுடையகாமனே! உன்னையே துன்பமடையும், ஒளிபொருந்திய வண்ணத்தினைவாய்ந்த கலைகளோடுங்கூடிய வெண்மையான சந்திரனைக் குடையாகக்கொண்ட மன்மதனே! தேகமெடுத்ததினாலுண்டாகிய பிரயோசனமறிவுடையோர்க்குண்டாகிய துன்பத்தினை நீக்கி உதவிபுரிவதே பெருந்தவமாகும், தேவர்கட்குஉதவிபுரிதலெவருக்குக்கிடைக்கும் அத்தகைய துன்கக்கே கிடைத்தது ஆகையால் அதிசீக்கிரமாயெழுந்து உன்சேனையோடு சென்று பாவதப்புத்திரியாகிய பார்வதியாரை மணக்க அரியதவத்தி லெழுந்தருளியிருக்கும் பெருமான் திருவுருவில் கருமபுச் சிலையால் ஐங்கணைகளைப்பிரயோகித்து வருவாயென விடைகொடுத்தனர்.

எமதுபெருமான் யோகங்கூடியிருந்த அச்சாரலில் தேவர்களெல்லாம் மகிழ்வடையவும், அதிகவூக்கத்தோடுசென்ற மன்மதன் அருள்தாங்கி முன்னேக வாசனைநீங்கப்பெறுத வசந்தகாலம்வந்தது விருட்சங்களுங் கொடிகளுஞ் சருகுகளையுதிர்த்துவிட்டு மெல்லியதளிர்களைப்பரவச்செய்து மொக்குகளுண்டாகப் பசியதேன்கள்சிந்த நறுமணத்தோடு மலர்களெல்லாம் வெப்பக்கங் களிலுமணர்ந்தன, மந்தமாருதக் காற்றுனது சுனை

களிலுள்ளநீரிலேபடிந்து அதிகசீதளததோடு பலமலர்களினின்றுஞ் சிந்துமகரந்தப்பொடியளாவி மெல்லமெல்ல அந்திவண்ணன் அருகில்வந்து சேர்ந்தது, புட்பங்கள்தோறும் வண்டுகள் தேனைக் குடித்துப் பெட்டை வண்டுகளுடன் கலவிசெய்து ரீங்காரஞ்செய்யுங்காட்சிவாய்ந்தன, இலைகள்மலிந்துகிடக்கிற கிளைகளிடத்துத்தங்கி குயிற்குலங்கள் கூவியார்த்தன, படையெனச் சொல்லப்பட்ட மாதர்கள்பலர் வளையல்களை யணிந்தத ங்கள கரங்களிலேந்தும் வீணைகளினிடத் துண்டாகிய வோசையும், தங்கள் கண்டத்தினின்றுவரு மோசையும் ஒன்றே யென்று சொல்லும்படி பாடினார்கள், இடைகளானவை துவண்டு துலங்கப் பலமாதர்கள் இங்கித்த தோடாடினார்கள், இச்சமயத்தில் மன்மதனானவன் பஞ்சபாணங்களை வில்லினிடத் தேற்றிச் செயம்வாய்ந்ததென்றுன்னி கண்ணுதற்கடவுளின் மீது பிரயோகித்துவிட்டனன், மதுபொருந்திய துளபமாலையினையுடைய விஷ்ணுவையும் தாமரை மலரிலிருக்கும் பிரமனையு மற்றத்தேவர்களையும்நிமிடத்தில அவர்கள்மனதைமாற்றிவாட்டுங் கடுந்தொழிலினைச்செய்யுங் காமவாளியானது சந்திரசடாதரனாகிய சாம்பசிவன் திருமேனிமேல் தாக்கியபோது தாமரைபுட்பத்திற்குமுன்னே மற்றகுளிர்ச்சிபொருந்திய புட்பங்கள்போலாயின, யாதொருவிகாரத்தினையுஞ்செய்யாது அவ்அம்புகள் அழிந்துவிட்டனவேயாயினும் அகாரவாச்சியனாகிய அமலரை அதிக கருவத்தோடு வெல்லும்படி நெருங்கியதால் தனதுநெற்றிக்கண்ணினால் மகரக்கொடியினையுடைய மன்மதனைப்பார்த்தனர், அண்டகோடிகளையெல்லாம அரைக்கணத்தள விலழித்திடத்தக்க நெற்றிக்கண்ணுக்குமுன்னம் நிற்பவர்யாவர் கொழுந்துவிட்டு எழுகின்ற அக்கினியின்மேல் நெருங்கிவீழ்ந்த ஈயைப்போல காமவேந்தன் வெந்தனன், பெண்ணினைப்

புணர்ந்தானென்றும், பிள்ளைகளைப்பெற்றானென்றும், கங்கை
யென்னுமாதைத் தலையிற் சுமந்தானென்றும் சிவபெருமானு
ணமையினையறியாது பிதற்றி இகழ்ந்தவர்கள்வாயில் புழுதி
யடைய அண்ணலாகிய காமன் வெந்துவிட்டதை யறிந்தனர்
அக்காலத்துச்சிலமாதர் தங்கள்கூந்தலோடுவீணைசோர்ந்துவிட
அதிவேகமாகவோடினர், சிலமாதர் அழகியதங்கள்நெற்றிகளில்
வியர்வையரும்ப ஐயகோ! ஐயகோ!! என்றார், சிலமாதர் தங்
கள் மழலைச்சொல்தடுமாற மணமீதுவிழுந்தார், சிலமாதர் வே
ங்கைப்புலியினைக்கண்ட ஆட்டினைப்போலப்பயந்து நடுங்கினர்,
அநாதியே ஆன்மாக்களிடத்திருக்கிற ஆணவமலம் மாய்ந்த
வுடன் அவ்வாணவத்தாலாகிய காரியங்களெல்லாஞ்செயலற்று
ஒழிந்தாலென்ன சம்பராரியாகிய மன்மதன் சாம்பலானவுடன்
தென்றற்காற்று தன்செயலினின்று நீங்கித் தேய்ந்தது, சிவ
பெருமான்நெற்றிவிழியால் சித்தசனாகிய மன்மதன்வெந்ததை
யறிந்தப்போதே தேவர்களெல்லாம் இனியென்ன செய்வதெ
ன்று தங்கள் புத்தியுமுயிரும் வெந்தனர், இதனையறிந்த இரதி
தேவியானவள் என்னுயிர்த்தலைவனே! தலைவனே!! என்றரற்றி
இரத்தினங்களிழைத்தஆபரணமானவையானைத்தந்தத்தினையொ
த்தமுலைகளினின்றுநீங்க, பொருந்திய புட்பமாலைகள் மெல்
லிய கூந்தலோடுசோர, கரங்களிலணிந்த வளையல்கள்சிந்த கவி
ழ்ந்த பூங்கொத்துகளையுடைய வொருகொம்பினைப்போல பூமி
யில் விழுந்தனள், அழகிய கைகளிலேயிருந்த கடகங்களைக்
கழற்றிப் பூமிபள்ளமாம்படி பலதரம் வீசினள், சுருண்டு படுத்த
னள், புரண்டனள், வாய்விட்டலறினள், விளக்குவர்த்தியினின்
றுஞ்சிந்துமநெய்போல கண்களினின்றும நீர்த்துளிகளைச்சிந்தி
தேகத்தின்மீதிருந்த புழுதியைக்கழுவினள், பெருமூச்சுவிட்
டனள், உளம்பதைபதைத்து ஒடுங்கிச்சோர்ந்தனள், முலைக

கணகளசிவக்கும்படி அடித்துககொணடனள, வயிறுவீஙகும் படி அழுத்தினள், இரண்டுகைகளேயுமடிககடி நெரிததுககொ ண்டு கூந்தலும், கரஙகளும், கண்ணீரும, பூமியிலதுழாவ முகமவாடித தவித்திட்டு என்னுருயிரே! யெனகணமணியே! யெனககோ ரருந்துணேயே நினனுடைய ஆதரவாலே உயிரவா ழுதலன்றி வேறுதுணேயில்லாத அடியாளுககு நின்னுருவத்தி னேககாட்டாது பகைவரைப்போலவே கைவிட்டனே அவலமா கிய நிலைமையிலென்னே விட்டுவிட்டு, அனனுய்! அனனுய!! நீ யெஙகுபோந்தனே ஓராயிரஙகணணனுகியதேவேந்திரன மாறு டலமபெறசசெய்ததும், பிரமன் தானபெறறபெணணின்மீது இசசைவரசசெய்ததும, விஷ்ணு சுடுகாட்டில் பைத்தியமபிடி த்தலையுமபடி செய்தது முதலாகிய நினது வலிமை சிவபெரு மானிடத்துசசெல்லுமா! அவர்பாலுன்மாயமென்செயும், மெல லிய பஞ்சணேயில நின்னேடு கலவிசெய்து விளேயாடுங்காலத் துச சநதோஷமிகுதியினுலே பூஞ்செணடினேயெடுத்து நின் மாரபின்மீது எறியேனே, புட்பமாலேயினேயும் நினது மேல் வீசேனே, அரைஞாணேககொணடும் நினது கரங்களேககட்டே னே, ஊடலால கோபித்துச் சிணுங்கியகாலத்தும, நீககுவத றகருமையாகிய நினது இனிமையாகிய மொழியாலே பொருந் திடுந்தாதும வாடி நீஙககோபித்துக கொடுஞ்சொலலேப் பிர யோகித்துமறியேனே, எனது கண்களானவைசிவகக உனே யொருநாளும்பாரேனே, நாமிருவருங கலவிநடத்துங்காலத்தி லேயும உந்தனுக்கு உள்ளக்குறிப்பிலாதபோது உன்னேககிள் ளிக்கடித்துப் புடைத்து இருகக நல்லவிளேயாட்டுகளேயுஞ்செ ய்ய நினேயேனே! அவறறுள்ளுமேதாகிலுங குறையுண்டெ னின் பொறுத்துககொள்ளாமல் என்னேப்புறத்தேதள்ளி என் னேவிட்டொளித்துக்கொண்டு தளாகின்றவளாகிய வெனக்கிர

ஙகாதிருப்பதுதகுமோ இதுதகுமோ! கலவிதொழிலிலேயும எனது கலைகளையும அணிகளையும் உமது கைகளால நன்குதிருத்தி எனனுடனகூடி ஒருகணமேனு மென்னைவிட்டுப்பிரிதற்கிசையாத கோமானே! இப்போது சுழன்று பூமியின்மீது கூநதலவிழுநது சிகுண்ண ஆபரணஙகளெலலாமழிய புரணடழும நிலைமையையுடைய அடியாளிடததிரஙகாத நிலைமை உமககு வநததெனனே! என்னே!! இநதப்பிரகாரம இரதிதேவியானவள்மெலிநது உயிா முழுதுமொடுஙகி மேம்பட்ட தனது மெய்சசிா முழுவதுநலிநது இரஙகுகிறபோது நாரதமுனிவரஙகெழுநதருளிய மாததிரததுத துககமென்னுஞ் சேற்றிலழுநதிப் புதையுணடுகிடநத நெஞ்சமானது வலிகொண்டெழமாரனமனைவி யெழுநது வணஙகிநின்று பெருகிய துனபததிலமுழுகிக் கூககுரலிடவு மரங்களெல்லாம் முருகி நீராகியோடலுற்றன, குருகினஙகள் கணணீாவாரநடுஙகின, பசியபுல்லினைக் கறிததுககொணடிருநத வாயினையுடைய மானினமயஙகினின்றன, இஙஙனம் விமமிவிமமி பெருமூசசெறிநதுபற்றிப்படாவததறகு ஆகாதரவில்லாத ஓாகொடியினைப்போலத்தவிதது ஒருதுணைப்பற்றியெழுநது மலரினது மொகைகையொதது விளஙகுந தனது தனஙகளினமீது கண்ணீா மேகம்போலச சொரியப்பொழிநது நினறனள். இவ்வாறு நின்றவள்முகததைநோககி நிரமபிய கருணையுண்டாக நல்லிசையோடுங்கூடிய வீணையில்வல்ல நாரதமுனிவரானவர், மூங்கிலைநிகர்தததோளினையும வாசனைகமழுங கூந்தலினையும், சிவந்தவாயினையும், வளப்பமிகுந்த தனங்களையும் வாய்நத இரதியைததேற்றிஉரைககவாரம்பிததனா், மதனன்மனைவியே! ஊழ்வினையானதுஅனுபவித்தாலன்றி யொருக்காலுமொழியாது இஃதுணராமல்வீணே துன்பததால நைவதேயலலாமல் வேறுபிரயோசன

ரிலலே. உனதுநாயகனுக்குப் பிறவிமூன்றுண்டு. பார்வதியா ரைப்பாகததிறபெற்ற பரமசிவனிடததிலொன்று, துளபமாலை தொஙகப்பெற்ற கண்டததினையுடைய கமலககணணனிடத திலொனறு, விஷ்ணுமூாததியாலவநத விநததேகநதானிப் போது அழியப்பெற்றது, மறறொபிறவியுஞ்சொல்லுகிறேன் கேட்பாயாக, யாதவாகுலததிலே கண்ணனென வவதாரஞ செயயப்போகும் விஷ்ணுமூாததிககும உருககுமணிதேவிக கும் புததிரனாய்ப்பிறநது பிரததியுமனெனனுமபோபெறறு வாழ்வன, நீயும் பிரமனது சாபததால சமபரனென்னு மனேயி றபிறநது அவனுககு மனையாய் வாழ்வாய் உனதுநாயகனுக குவநதவினையினது உணமையையும் விரிப்பேன்கேட்பாயாக.

முன்னொருகற்பதத்தில், பரவிய பலவிதமாகிய விரததி னங்களைவாரி நெருஙகியெழுந்து பாய்கின்ற காவிரிதீரததின் வடகரையில் நீர்முகந்து மேகங்கள்தங்கப்பெற்ற வராகவரைச் சாரலில் ஏமபுரமெனவோர்நகருண்டு அந்நகரில் நினதுநா யகன் சுநதரனென்னுமோரரசனாய்ப் பெருவலியினாலும், பேரழ கினாலும், எப்பொருளினையு மிரவலருக கில்லையெனாதுகொ டுப்பதிலும் பெயர்பெற்று விளங்கிககொண்டிருந்தனன். அத் தகையோன் பேரழகினுககமைநத பெருவனப்பினையுடையவ ளாய்ப்பெருங்காதலுடையவளாய, இலலறததினுககுகநத கற் பினையுடையவளாய இரதியெனனும்பெயரைவாய்நத நீமனே வியாயினே, நீஙகளிருவீரும இருதலைப்பட்சியி னொருயிாபோ லப்பொருநதி வாழ்நதுகொண்டிருக்கிற காலததில இளவே னிற்பருவம்வர அககாலத்தில் நினனோடு கலவிததொழிலசெய் யுமபொருட்டு ஓர்சோலைககேக வுன்னினன. காவிரியாற்றின் மணல்பரந்து அழகுமிகுநது உள்ளிடமுழுதும் பூவினின்று

தேன்றுளிசிந்தப் பூநதாறுகள் பிரகாசிக்கப்பெற்ற பூவிதழ்
கள்பரவ மாஙகுயிலகளினகுரலுண்டாகுஞ சோலையினையடாந
நீாகள, அதிக விசையாயவருங காவிரிநதியின் மெலலிய
மணலசோாநதகரையில கையினிடத்துச்சிலைவளைதது அம்புபி
டிதது அதிக அனபுகரைந்துருகு காதலியாகிய நின்ஞேடுசெல்
லுகையில வழியிலெதிாப்பட்ட பட்சிகளின்மீதும் மிருகங்
களினமீதுங் கணைகளைவிட வாரம்பிததனன், அஙஙனம விடு
கையிலஅவவனததில அரியதவஞ்செய்துகொண்டிருந்த வொ
ருமுனிவா வளாததுககொணடிருககு மிகவழகுடைய மான்
கூட்டங்களுள் ஒருஆணமாளின்மீதுபட்டிறநதது, அதனின்
பெட்டைமாஞனது கணடுகலஙகி நெஞ்சுலையவோடிதன்
னைவளாககு முனிவாதாளில விழுநது கணணீாசிநத வழுது
மெயகுலைய பெருநதுயரஙகொண்டு நின்றது, அதனைககணட
அப்பெருமுனிவா தாஞுநதுககஙகொணடு அதன்கண்ணீரை
த்துடைததுத தேகததைத தடவிசசொல்லுவாா, எனது அரு
மைப்பிளளையைப்போல மிகக வாசையால்வளர்தத மான்களி
லொனறைககொன்று மறறொனறு இவ்வாறுஙகெ த துன்பம்
புரிநதவன் உடனே சாமபலாய்ப்போககடவன், அவன் இல்
லறததிஞுக்குத துணையாகிய அவனமனைவி இப்பெட்டை
மானபடட துயரததினைககாட்டிலு மதிகதுன்பததினை யடை
யககடவளெனறு சபிததனன், இதைககேட்ட சுநதரனெனஞு
மரசன் மிகததிடுககமுற்று அமமுனிவரை அடைந்து மிகபத
தியோடு திருவடியினைத தொழுதுப்போற்றி பஞ்சேந்திரியங்
களையுஙகெடுதத முனிவரே! நினதுமானெனவறியாது தீங்கு
செய்தனன், சிறியனேன மடமையாற்செயத பிழையினை
மாற்றி நினதுசரணமடைந்த வெனக்கு நினதுசாபம் பற்றுதி
ருககும்படித திருவுளம் செய்யவேணடுமென் றிறைஞ்சினன.

பத்தியோடுபெணிந்த வரசனுடைய அனைபைநோக்கி அவ்வுத தமமுனிவாகூறுவாராயினர்.சுந்தரனென்னும அரசனே! நானிட்டசாப முன்னேவிட்டு நீங்காது ஆயினும அச்சாபம் உனது இநதச்செனமத்திலவநதுபறறுது, இனிமேல நீ இலட்சுமியினது கற்பத்தில்விஷ்ணுபிரானுககுப் புதல்வனாயககாமனென்னும்பெயருடன் பிறநது உனது மனேவியாகிய இரதியோடு வாழ்கின்றகாலத்தில பிரமனது தநதிரத்திஞல மகாகைலாசத்தில் எழுந்தருளியிருககினற ஸ்ரீகணடபரசிவப்பிரபுவினமீது புட்பபாணத்தைப் பிரயோகிதது அவாநெற்றியிலிலகும் திருநேத்திரத்தால நீறுகிவிடுவை உனதுமனேவிஅபபோது மிகுந்த துனபத்தையடைந்து பின்னா பற்குனிநதியில ஸ்நானஞ்செய்து திருமூலநாதரை வணஙகிப் பூசனேபுரிநது உன்னையெழுப்பி உனனேடு சுகமாக வாழ்நதுவருவளெனறனா.

இநதப்பிரகாரமாக பூர்வத்திலேயே எற்பட்டிருத்தலின் நீதுன்பமுற்றனே இரதிதேவியே நினதுநாயகனே யடையவிரும்பினல் சிவபூசையே செய்யவேண்டும், அப்பூசைககிரஙகி உனக்கின்பம் கொடுக்கத்தகுந்தவர் திருமூலநாதரன்றி இவ்வுலகில் வேறுயாருமில்லை அவரெங்கே யெழுந்தருளியிருககினறரெனில் பசிய திரைகளைவீசாநின்ற சலநிறைந்த பற்குனியென்னு நதிதீரத்தில் உலகமெலாந தொழுதேற்ற விசேஷவாசனேயை வீசிககொண்டிராநின்ற விலவவனமொன்றுண்டு, அனேகமான வரங்களைக கொடுககத்தகுந்த பற்குனிநதிதீரத்தில திருமங்கலமென்னுந்தலமும், பிரமனெழுந்தருளியிருந்து மகத்தினைச்செய்து தன்மீது கோபித்திருந்த கலைமாதுந திருபமாய்வர மகிழ்ந்து படிநத காயத்திரிநதிக்கரையிலுள்ள அன்பிலாலத்துறையும், வில்வவனமும மிகசசிறப்புற்றன, திரு

மங்கலத்தில இலட்சுமிதேவி பூசித்துத திருமாலினையடைந தாள், திருவாலததுறையில சரசுவதிபூசிததுப் பிரமனையடை நதாள், அவற்றின் மததியிலவிளங்குங கூவிளநகரையடைந துபூசைசெயயில் நினது நாயகனுகிய மன்மதனையடைதற் கையமில்லை, கொன்றையினிடததும், கூவிளத்தினிடததும், இலிங்கததினிடததும், குருவினிடத்தும், சிவயோகியரிடத தும், சிவபெருமான நிலைபெறறுவிளங்குவரென வேதமுரைக குமு, அநதகொன்றையும், கூவிளமும், இலிஙகமுமு, சிவயோ கியரும் ஒனறு பொருந்தி விளஙகுவதாகிய கல்யாணபுரத்தின் பெருமையை யாவரெடுததுப்பேசுவா, வடககே கயிலை மநதர கிரிமுதல தெறகே சமுததிரமீருக மததியிலுள்ள பூமியில் எழுந்தருளியிருக்குஞ் சுயம்புச்சிவலிஙகமூர்த்திகள் பலவற்றி னையுமு பூசைபுரிநத பயனகளெல்லாங் குற்றமில்லாத வில்வவ னததிலெழுநதருளியிருககின்ற சுயமபுமூர்த்தியாகிய சிவபெ ருமானைப்பூசிககின வநதுவிடும். அதிபாதகம், மாபாதகம், உப பாதகமுதலிய செய்வோர் அவற்றினுககு வெவ்வேறு பிரா யசசிததஞ செயயவேண்டுவதிலலை, நதியணிநத நம்பனுகிய திருமூலநாதர் திருததொணடுகளிலொனறே போதுமானது. வேதஙகள் முழஙகிககொணடிருக்கும் பூவாளூரில விளங்குந திருமூலநாதா பெருமைகளை வேதங்களினுலேயும் எடுததுச சொல்லுவதற்கு அருமையாயினும் ஆதிபகவனுகிய அரனூர் அருளையெளிதிலடைதற்குரிய செந்நெறியோதும் நிலைமையி னையுடைய மநதிரமொனறுண்டு அதனையுரைப்பேன் இரதி தேவியே கேட்பாயாக.

அமமகாமநதிரமானது பாவஙகளைப் பரக்கடிக்கும், நோய் களை நொறுக்குமு, துஷ்டப்பேய் முதலியவற்றைததுரத்துமு,

புனதெய்வநிலைமைகளைப் போக்கடிக்கும், செல்வமனைத்தையு ஞ்சேர்க்கும், வானுலகநிலையைவழங்கும, அருளையடையச்செ ய்யும, சிறந்தமோட்சத்திறசோகக்கும், அமமந்திரம வேதங்க ளின்முடிவாகவிளங்கும உபநிடதங்களின சாரமாய், அனேக மான பிறவிகளில, தவங்கள்செயபவாகட்கே உபதேசிக்கப்படு வதாய், சகலசித்திகளையுமடையச்செயவதாயவிளங்கும். தேவா கட்கெலலா நாயகமாகவிளங்கு மகாதேவனைப்போல, மந்திரங கட்கெல்லா நாயகமாகவிளங்குவது பஞ்சாட்சரமந்திரம அப்ப ஞசாட்சரத்தோடு பிரணவத்தைக கூட்டியாருககிப்பிராமணரா திமுககுலத்தினாகள் இரகசியமாகச்செபிப்பா. சூத்திராகளும், மழலைத்தீஞசொற்களைவாய்ந்தமாதாகளும, பிரணவத்தினைநீககி ஐநதெழுத்தினையே உச்சரிப்பா. இத்தகையமந்திரத்தைச்சாறறு வேன பரிசுத்தமுடையவளாய வருவாயென்றனா கேட்ட இர திதேவியானவள் அதிசீக்கிரமாக குளிரந்தசலத்தில ஸநானஞ செய்து வந்தனள், வந்தவுடன புண்ணியத்தினையே வளாப்ப தாகிய திருநீற்றினையும், உருத்திராட்சத்தினையும, வீணையிலவ ல்ல நாரதமுனிவா கொடுத்துத தீட்சைசெய்து பஞசாட்சரத் தினையும் உபதேசித்து முறையே அவற்றின்பெருமைகளை யெ டுத்துச்சொல்லுவர்.

மன்மதனின்மனைவியே! இவ்விபூதியானது பவரோகநிா மூல அருமருந்தெனப்படுமெ, இது வைதிகவிபூதியென்றும சை வவிபூதியென்றும் இரணடுவிதமாம். வைதீக விபூதியானது வேதத்திற்சொன்னபடி யாகத்தில விளைவிப்பது இதுபுத்தி யொனறினையேயளிக்கும்,சைவவிபூதிஆகமத்திற்சொனனபடி அககினியாலவிளைவிப்பது,இதுபுத்தியினையுமுத்தியினையுமளி க்கும். இச்சைவநீறு கறபம்,அனுகறபம், உபகற்பம், அகற்பமெ

ன்று நால்வகைப்படும். கற்பமுடிக்கும்விதமாவது, கன்றீனாத தாய், கொடுமையில்லாததாய, கிழமில்லாததாய், சினையில்லா ததாய,வால் செவி குறைவில்லாததாய், மலடில்லாததாய், மல முண்ணாததாய், கனறீன்ற பதினைந்துநாளுக்குட்பட்டதாய், கன்றிழநததாய, குருடாய, செவிடாயுள்ளதீஙகுகளில்லாத பசி வினைததேடிச சமபாதிதது, பஙகுனிமாததது நெல்லின்வைக கோலேமேயச்செய்து, காலையிலெழுந்து அனுட்டானமுடிதது கொண்டு, தொழுவததிறசென்று பசுவின்மீதுசாவிததிரியெ னனு மநதிரததால சநதனமுமலாகளுஞசாததி, தூபதீபஙகொ டுதது, அன்னம்பாகிலே நிவேதித்து, பசுவைப்பணிந்து அருச் சனைபுரிந்து, மநதிரநூறுசெபிதது, பருவம், அமாவாசை, அட் டமி, சநூாததசிகிரணமஇனனகாலஙகளில் அப்பசுவினகோம யத்தைததாமரையிலையிலாவது வாழையிலையிலாவது,பலாசிலே யிலாவதுதாஙகி யோனியிறபடாது, சததியோசாதமநதிரததா லேற்று வழும்பினைத்தள்ளி, கவவியமபெய்து, கோரமநதிரத் தாறபிசைநது, புருடமநதிரத்தாலுருட்டி, ஓமததிற்பதடியோ டிட்டு, அகோரமநதிரததால் விளைவிதது, பாகமுற்றபோது, ஈசானமந்திரததாலெடுதது, நூதனவஸதிரததில்வடிதது, சங கு, பொன், வெள்ளி, தாமிரம, மண், சுரை, பிததளையிப்பாத்திர ஙகளிலவைதது, பஞசாட்சரதியானஞசெய்து, பஞ்சபிரமமந திரத்தால் சடஙகஞ்செய்து, வியோமவியாபியென்னு மந்திரத தால் ஆகமவிதிப்படிசெபிதது, சண்பகம், கேதகை, பலாசம, புன்னாகம், சிறியசணபகம, தாமரை,துளசி,பததிரி, கருப்பூரம், வெட்டிவேர், விலாமிசசை, மலலிகை, தககோலம், நாயுருவி, தருப்பையினுனி யிவைகளின வாசனையையேறறி, சதயோ சாதமும், ஈசானமுஞ்செபிதது, காயததிரிவிளமபிப் பூமியில் வைதது, குட்டிககொண்டு, வாயபொததி, அவகுண்டனம

பண்ணி,அத்திரதெரிந்து, தேனுமுத்திரைமுதலாகசசெய்து, சிவமந்திரமுச்சரிதது விபூதியினையெடுப்பா. இது உததமவிதி யாம் இதுநிறக.

உற்பனத்தொடு அன்றெடுதத கோமயததை அன்றேயுரு ட்டியாககினும்,உலர்த தியபின்ஞககினுமகற்பமெனறேபெயா பெறும், இரண்டாவது அனுகற்பமாவது சிததிரைமாததநில வனஙகளிறசெனறு உலாநதுகிடககின்ற சாணததைக்கொண ர்ந்து இடிததுப் பஞ்சகவ்வியம்பெய்து முன்சொன்னபடிமந்தி ரங்களால் விளைவிப்பதாகும், மூன்ருவது உபகற்பமாவதுகாட் டிலுளவுலர்ந்த சாணஙகொணர்ந்து கோசலமாத்திரம் பெய்து முன்சொன்ன ஆகமவிதிப்படி விளைவிப்பதாகும், நானகாவது அகற்பமாவது வனங்களில் இயறகையாய் அக்கினியில்வெந்து வீழ்ந்துகிடக்குஞ் சாம்பலைககொணர்ந்து பஞசகவ்வியமபெய் துமந்திரங்களாலுருட்டி வைததுககொளவது, இரதியே இதத கையவிபூதியிலொன்றை யணிந்துகொள்ளக்கடவாய்.

உருத்திராக்கமணியானது நமது சிவபெருமானது திரு நேத்திரங்களிலிருந்து உண்டாகிய அருட்கண்ணீரின சொரூ பம், இது பலமுகங்களோடுகூடிவிளஙகும், ஒறுமுகம சிவசொ ரூபம் இது பிராமணரைக் கொன்றபாவததைப் போக்கும், இருமுகஞ சிவசத்தி இது பசுவைககொன்றபாவததைப் போ க்கும், மூன்றுமுகம்அககினிசொரூபம் இதுமாதரைககொனற பாவத்தைப்போக்கும், நாலுமுகம் பிரமனசொரூபம இதுமனி தரைக் கொன்ற பாவத்தைப்போக்கும, ஐநதுமுகம் வாயுசொ ரூபம் இதுநீசபுணர்ச்சியின் பாவததைப்போக்கும், ஆறுமுகம் சுப்பிரமணியக்கடவுள்சொரூபம் இது பிரமகத்திப்பாவததை ப்போக்கும், ஏழுமுகம் ஆதிசேஷசொரூபம் இது பசுவைக

கொன்றபாவத்தையும், பொன்களவாடிய பாவத்தையும்போ கக்கும், எண்முகம் விநாயகசொரூபம் இது குருபத்தினியைப் புணர்ந்த பாவத்தைப்போக்கும், ஒன்பதுமுகம் வயிரவசொரூ பம் இது பாமபுகளைக்கொன்ற பாவத்தைப்போக்கும், பத்து முகம் விட்டுணுசொரூபம இது பேய்பூதமாதிகளால்வந்த பயமபோம், பதினொருமுகம் பதினொருருத்திரசொரூபம் இது அசுவமேதமாயிரஞ்செய்த பலனைத்தரும, பன்னிருமுகம் இது துவாதசசூரியாசொரூபம இது அசுவம பசு முதலிய தானங் கொடுத்த பலனைத்தரும, பதின்மூன்றுமுகம் முருகன்சொரூ பம இது சகலசயஙகளைக்கொடுக்கும், பதினனகுமுகம் சிவ சத்திசொரூபம இது பதமுத்தியைத்தரும, பதினனகுமுகம் நாதசொரூபம இதுகிடைப்பது அரிது கிடைத்தால் கண்டத்தி லொன்றுதரிக்கின இது முத்தியினையேகொடுக்கும், பதினைந் துமுகம விந்துசொரூபம இது சாயுச்சியத்தினையேபயக்கும்* உருத்திராட்சத்தைக்காணின பிரயோசனபலன் இலட்சம, பரி சிக்கிலபலனகோடி, தரிக்கிலபலனஆயிரங்கோடி, கணநேரமாயி னும் நாய்க்குத்தரிக்கில அது நறகதி யடையுமெனில் மனிதா தரிக்கில் அவாகளடையுமபலனை இவ்வளவென மதிக்கற்பால தோ உருத்திராட்சந்தரியாது சிவலாயஞ்சென்றிடினும், சிவ பூசைசெயதிடினும், புண்ணிய தீாத்தஙகளில் ஸ்நானஞ்செய் யினும, பிரயோசனபபடாது, உருத்திராட்சந்தரியாது தன்னை சைவனென்று சொல்லிக்கொளவது கழுத்தில மாஙகலிய மின்றித் தனனைச் சுபமஙகிலியென்று சொலலிக்கொள்வதை

*உருத்திராக்கமணியால் இனனின்னபாவஙகள் போ மென்று இவ்விடத்தில் குறித்தது அபுத்திபூர்வமாகவியற்றிய பாவஙகளுக்கன்றிபுத்திபூாவமாகவியறறியபாவஙகளுக்கனறு.

யொக்கும்; இரதிதேவியே யித்தகைய கண்மணியைத் தரித துக்கொளவாய்.

பஞ்சாட்சரமானது சிவபெருமானுடைய திருநாமமாகிய நமச்சிவாயவென்ற ஐந்தட்சரங்களில் நகாரத்திற்றிரோதசததி யும், மகாரத்தில மலமும், சிகாரததில் சிவமும், வகாரததில் அருளும், யகாரத்தில் ஆன்மாவு நிற்கும், இவ்வைநதும பதி, பசு, பாச மூன்றிலடங்கும், எங்ஙனமெனின் சிவ்வும், வவ்வும், நவ்வும் பதியின்கூறுகிய சிவததிலும், அருளிலும், திரோதசத தியிலுமடங்கும், யகரம் பசுவிலடஙகும், மகரம பாசததிலடங கும், அஞ்ஞானமாகிய மலமும அதனேடுகூடியிருககப்பட்ட திரோதானசததியும் ஆன்மாவைப்பொருந்தாம னீஙகும்படி சிவமுன்னுகவுச்சரிததால திரோத மொருபாலும், அருளுஞ் சிவமு மொருபாலுக், முன்பின்சூழ்ந்துநிறக நடுநின்றது ஆன் மா, அப்போது நவ்வாகிய திரோதசத்தியும், மவ்வாகிய மலத தினமேலீட்டைநீக்கி யருளாகநின்று பிரகாசிககும மலததினி னறு மீளவிட்ட வவ்வாகிய வருள் சிவ்வாகிய சிவததையும் தாராநிற்கும், பின்பு மலபாகம்வந்த யவ்வாகிய ஆன்மா வகார மாகிய அருள் தாரகமாகச்சென்று அநதச்சிகாரமாகிய சிவத தோடுஙகூடி யிரண்டறநின்றனுபவிககும். இரதிதேவியே யித தகைய பஞ்சாட்சரததை உச்சரிப்பாய. எனறு இந்தப்பிரகார நாரதமுனிவாசொலல அவா அருட்டிரததைநோககி இரதி தேவியானவள மிகவுநதாழ்நதுவணஙகி தேவரீாசெயத இத தகைய வுதவிககுக் கைம்மாறு எளியாள் என்னசசெய்யப் போகிறேனென்று தாழ்நதனள். அவ்வாறுவணஙகிய இரதி தன்னை மாதவனேககி மாதே! வசந்தனேடு நீபூவாளூரையெய திப் பெருமாட்டியாரோடு எழுந்தருளியிருக்கும் பெருமானைப் பூசனைசெய்யின் உனது கணவனையடைவாய் என்றுசொல்லி மறைந்தனர்.

பின்னர் இரதிதேவியானவள் அவ்விடம்விட்டுநீங்கி,ஆகாயவழியாகச்சென்று, பூவாளூரையடுத்து,பற்குனிநீர்தோய்ந்து வெள்ளைவஸ்திரம்தரித்து, விபூதிசண்ணித்து, உருத்திராட்சகண்டிகைபூண்டு, துதிப்பதற்கருமையான பெருமானது பஞ்சாட்சரமந்திரதியானம் நாவாரச்செபித்து, திருவடியைசசிந்தித்து, மெள்ள மெள்ள நதிக்கரையினின்று நீங்கி, சிவாலயத்தையணுகி, சந்திரமண்டலத்தை அளாவும்படி மணிகளாலிழைக்கப்பெற்றிருக்கிற கோபுரத்தைவணங்கி, ஆலயத்துட்புகுந்து, கிரமப்படிவலஞ்செய்து, மூவுலகமும்வணங்கப்பெற்ற இறையவனைக் கண்களாற்பெற்றபயனடையத்தரிசித்து, கசிந்து, உருகி, கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம்சிந்த நின்று, பசியமாதுபாகத்தைப்பரிந்து போற்றி, வசந்தனென்பவன எப்பொருளுங்கொணர்ந்து கொடுக்க விதிப்படி பூசையாற்றி, சற்றுநேரமவரையில் தியானித்திருந்தனள். பின்பு கங்குலைநிகர்த்த கூந்தலினையும், *கருவிளைநிகர்த்த கண்களையும், திங்களைநிகர்த்த முகத்தினையும், குங்குமங்குலவிய கொங்கையினையும், கொடியையொத்தஇடையினையுமுடைய இமயவல்லியையும் பூசைபுரிந்தனள் இந்தப்பிரகார நித்தமுமபூசனைசெய்து நின்மலன்மந்திரத்தையெண்ணி, வேனிற்காலத்தில் அக்கினியின்மத்தியிலிருந்தும், மற்றப்பருவத்தில் புனலின்மத்தியிலிருந்தும்நோன்புநோற்ற உத்தமகுணத்தினளாய் ஒழுகி,கைகளைமேலேயுயர்த்தி நிராலம்பமாகப்பொருந்தி வினையினின்று நீங்கினவளாய் அரனதுபாதத்தில மனதைவைத்த,அணங்கினை மாரனை வேவநோக்கிய பாலநேத்திரத்தனாகிய பரமசிவனார கண்குளிரப்பார்த்து, திருவுளத்திற்கருணைபொங்க, தேவர்கள் பூமாரி யிருநிலத்தைப்போர்ப்ப இமையமாது இடபாகத்தில் மேவ, வெள்ளைவிடையின்மீது பூதகணங்கள்சூழ, இரதிதேவி கருதிய வுருவத்தோடு காட்சிதந்து நின்றனர்.

*கருவிளையென்பது காக்கணஞ்செடியின் புட்பத்தினை.

பவளச்சடையும், அச்செஞ்சடிலப் பவளக்கொடியை வளாகப் பாய்ச்சததவழ்கின்ற தண்கங்கையாகிய புனலும், அப்புனலைத்தாவிக குடித்து, அக்கினிநேததிரத்தாலுண்டாகிய தாகத்தைததணித்துக்கொள்ள விருமபுமானும், கொழுந்துவிட்டெரியு நெற்றிததீயின் நுனியிறபிரகாசிக்குந்திலதமும, வாசனை கமழப்பெற்ற கஸ்தூரியையணிந்தாலெலனன ஆழியிலுண்டாமாலம் அடங்குமிடறும், அமமிடற்றில விஷத்தையுடையவாநஞ்சுறறமென றுநினைததுசசேர்நது சூழ்ந்திருக்குஞ்சரபாபரணம்பூண்டமாபும, தேவாகட்கு அழகினையும், பெருஞ்சிறப்பினையும், செலவததினையும் தனது திருமேனியைத்தரிசிததமாததிரததுக கொடுத்தருளுஙகருணையோடுங் கூடியகணகளும், மறறொருபக்கததில் பெணணோடு கூடியிருககினும் தனது வேடம்பெரிதேயெனக்காட்டச் சடையோடும விபூதியோடும் அணிந்த தோலுடையும், பலவேறுன தேவாகளையும், பலவேறுன நல்வினைகளையும் சொலவோமெனினும் அவையெல்லாம் ஆராயததககனவலல. பிழைக்கவேண்டுவோா சமுத்திரத்தினின்றும் விடத்தையுண்ட விமலரது அழகிய வீரகணடாமணியணிந்த திருவடியே நலல மோட்சவீடாகும் என்னைப்போலவநது அடைமினெனறு சொலவனபோல சததிககுஞ்சிலம்பும், இவ்வாறுகவுடைய எம்பெருமான்எழிலதோன்றிய மாத்திரதது இரதிதேவியானவளவிரைந்தெழுந்து,சிந்தைமகிழ்ந்து,கரங்கூப்பிகறுத்தகண்களினின்றுநீர்சிந்த மண்மேல்விழுந்துவணஙகிவலமவநதுஆணவத்தின்வலிகெட அறிவோடுபோற்றினள.கருமம்,யாகம,யோகம்,ஞானமெனுமிவற்றல்வழிபடுவோர்க்குஅவற்றின் பயனுயருளுமொருவனேசரணம், அகிலமுழுவதற்குமுதல்வனே சரணம், அருட்செல்வனே சரணஞ்சரணமெனச் சிந்தைமகிழ எத்தியமாத்திரத்தில், நீலோற்பலம்போன்ற கண்க

ளையுடையஉமைமாதுநேரோநோக்கி இரதிதேவியினதுகனிந்த பேரனபால சாற்றுந்துதிக்கிரஙகி அப்பாவைக்குச் சிலககடை ககணருளவேணடுமெனப் பாலக்கண்ணுடைப்பரமனைவேண் டிநின்றாள், பகைவர்களது திரிபுரததைஅவுணர் குழாததோடு நீறுகப்புன்முறுவல்செய்த பெருமான்குளிர்ந்த புன்சிரிப்பை வழஙகி இரதிதேவியைநோககிசசொல்லுவாராயினர், மேகஙக ள்தவழாதபருவங்களிலேயும குழைந்த சாயலையுடைய மயி லனையாய் நீதொண்டுசெய்த அன்பினுக்கும், தூயவைந்தெ ழுததால எம்மைக்கண்டுவணஙகுந திறத்தினக்கும், காட்சி கொடுததிட்டோம இனிநீவிரும்புமவரஙகேட்டுககொள்ளககட வாயெனத திருவாய்மலாந்தருளினர். இறைவர்மொழியைக கேட்ட இரதிதேவிவணஙகிசசொலலுவாள். பிறையும அரவும் கஙகைப்பெருக்கும அணிந்தபெருமானே? மறைகளனைததுமறி யாஙின் மலர்ததாள வணஙகப்பெற்ற வடியாட்கு குறைகளு ளதோ ஆயினும்குழகனே ஒன்றுவிளமபுவேன், தஙதியிலலாத வீணையும், சககரமில்லாததேரும, சூரியனிலலாததாமரையும் போலக கணவரில்லாதமாதர்கட்கு இன்பமென்னவிருககிறது அநதண! அடியாள் வேட்கை தேவரீரறியாததலல ஆகையால் அடியாரிழைததகுற்றமனைததையும பொறுததுக்காக்கும் கரு ணையுடைய தேவே! எனதுகணவன்தேவரீாமீது அம்பைப்பி ரயோகிதத கடும்பிழையை மன்னிததது, அவன்வடிவினையெழு ப்பித தரலவேண்டுமென்றனள் கருணையங்கடலாயுள்ள கண் ணுதல் பெருமான் மருமலாக்குழலாள் விரும்பிய வரததினைத் தநதோமென்றா. அதிகமகிழ்ச்சிப் பொஙகிப் பேரருளதிறத் தைநோககி இரதிதேவி மறுபடியும் பெருமான்கழலை இறைஞ் சிநின்றாள்.

முனிவீர்காள்! இந்தப்பிரகாரம் இரதிதேவி பூசைபுரிந்த விததனதயுரைத்தாம். இனிக்காமனை எழுப்பி அவன்காதலிதத வரஙகளைநல்கி அவனைஅவன்மனைவி பால்தந்தவகையைசசொலலுவோமென்றனா சூதமுனிவர்.

இரதியருச்சனைச்சருக்கமுற்றிற்று

## மன்மதன்வழிபடுசருக்கம்.

மேகத்தையொத்த வாசனையோடுஙகூடிய கூந்தலைவாய்நத இரதிதேவிககு இடபவாகனததின்மேல் காட்சிதந்த வாரணிநதமுலையுமையாள மணாளனது திருககடைககண சாததிய மாததிரதது அழகுவாயக்கப்பெற்ற மேலைககோபுரவாயிலில் மன்மதனனவனதனதுகுற்றநீஙகப்பேரழகுடைய்ததோன்றிதிருககோயிலைவலமாகவரும்போது, சிவபிரான தனதுதிருவாயால இரதியின் முகததினைநோககி யருளுவாா, முருககோட்டையொதத வாயையுடைய கணவனுசிய ஐநதம்புடையவழகனைஎழுப்பினோம, அவனெழுந்து ஆலயததினைவலமாகவருகின்றான அவனை நீகீழக கோபுரவழியாறசென்றுகாணுவாய்எனறு அருளபுரிந்தனா, அக்கட்டளையைசசிரமேல்கொண்டு தாழ்நதுஅவவிடம்விட்டுநீஙகி கீழககோபுரவழியாலசென்று தனதுநேரோ வருகிறதேன்கமழும ஐங்கணையுடைய மன்மதனின் உருவததை தககண்ணாரககணடனள்.

கிரணஙகளோடுங்கூடிய மணிகளிழைத்த முடியும், திலகம்பிரகாசிக்கின்ற ஒள்ளியநுதலும், கமலநிகர்தத விழியும் நீண்டமூக்கும், சந்திரனையொத்த முகமும், பவளநேர்வாயும், மகரகுண்டலந் திகழ்கின்றகாதும், புறவிதழ் அவிழப்பெ

ற்றபுட்பபாணங்களைப்பிடித்த கைகளும், சிவந்தபாதங்களும், எதிரிலே தோன்றியவுடன் இரதிதேவியோடி புன்னைமரத்தி னிழலில் தழுவிக்கொண்டனள் இதுவரையில் கணவனை நீங் கியிருந்ததினாலும், கடுந்தவஞ்செய்ததினாலும், வளைந்தகூந்த லும், வாடியவுடலுமலிந்தது, முலைகள்வீங்கின, அரையிலுள்ள ஞாணறுந்தது, மாரனுடைய மார்புமுழுதும் கண்ணீரா ல்கழுவினள், பெருமூச்சு விட்டனள், தனனைத் தான்மறந்து அவசமுற்றனள், சங்கரனருளால உருவம்வாய்ந்த மன்மத னும்தனனைத்தழுவிய மனையாளதுமுலைகளெனுமுங்க விசாலம் பொருந்திய தனதுமார்பினால ஆலிங்கனம் செய்துகொண்டு அன்புஅதிகப்பட இன்பவெள்ளத்தின்முழுகி இருவருந்தம்மு ளொருவரை யொருவர குணத்தாலொத்து, வெகுநேரம் புன் னைமரத்தினிழலில் தழுவிய பின்னர் கொடிகள் நிரையப்பெ ற்ற நீண்ட மதிலையுடைய கோயிலுட்புகுந்து இடபவாகனரு டரான எமதுபெருமானை வணங்கினின்றா. இரதியும ஒருபு டை யொதுங்கியிருந்தாள். காமன் காதலோடு துதிக்கவாரம்பி த்தனன்.

மடவர்க ளேனுந் தன்னைக காணினெண் வடிவின்மாட்டு
நடங்வில் கினற நின்ன லதத்கு மியல்பைத் தேற்று
மிடவிய பூவா ளூரி னிருந்தரு ளிலிங்கத் தென்றுங்
கடவுளர் போற்ற வைகுங் கடவுளே போற்றி போற்றி.

சகலதத் துவத்தின் மாட்டுஞ் சார்ந்தசைக் கின்றான் யாவன்
சகலதத் துவத்தி னானுஞ் சகலமும் படைப்பான் யாவன்
சகலதத் துவத்தி னானுஞ் சார்தராத் தலைவன் யாவன்
சகலமும் யாவ னந்தத் தானுநின் சரணம் போற்றி.

மறைமுடி தனக்கு மெட்டா வாய்மையை யாதலானின்
னிறையரு ளியல்பை யாரு நினைத்துமை வல்லா ரோனுங்
குறைவிலன்புடையாராக காகக கொண்டனை யுருவ மற்று
லிறைவநின் பாதம் யானு மேததுதற் குரிய ளுனேன.

திருமறு மாாப னோடு திசைமுகத் தமர னேடைவ்
விருவரும் காண வொண்ணு வெம்பிரா னிரஙகி யீங்குப்
பொருவருங் காட்சி தந்தாயாதலிற் புன்மை யேனு
மருமலர்ப் பாதம் போற்றி வரஙகொளற்குரிய ளுனேன்

கொடிமரங திரண மாதி குழைதர வலைக்கு மென்கா
னெடியபொனவளையைமுட்டி மறித்திட னோாநத தேபோற்
கடவுளா முனிவா நெஞ்சங கலககுமென் வலிமை காட்டி[ம்.
யடிகள்பாற பிழைததகுற்ற மனைதனதயும்பொறுக்கல்வேணடு

இந்தப்பிரகாரங் தோததரிததுப்பினனருஞ் சொல்வாளுயி ளுன், மணமபொருநதிய நறுஙகடுகைகையணிந்த மகதேவா' நினதிருவடியினிடததுு நீஙகாதபததி யெனககுவேண்டும், புட்பதனுவனுகிய என்னைஎழுப்பியகாரணததால இநநகருககு ப்புட்பரனு புரமென்றும், தேவரீருக்குப் புட்பரனுவீசுர னென்றும் பெரியோராயாருஙகூறல வேண்டும, எனககுககலியா ணம் இவ்விடததில அளித்தகாரணததால் இப்பதிககுககலியா ணபுரமெனறும, தேவரீருககுக கலியாணநாதனெனறும், கோ புரத்திற்குக கலியாணசிகரமெனறும், வழஙகுவதோடு தெரிசி ததோாகட்கெலலாம கலியாணநதனைப் பெறவேண்டுமென் ருன். காமவேள கேட்டவரஙகளை யெல்லாம் கண்ணுதலார் தநது கரந்துவிட்டனர். மறுபடியும் வாமமேகலையுடைய இர தியானவள தனது நாயகனேடு மறைகளுக்கெட்டா மதியணி

த சடாதரனைச் சிவலிங்கததிலருச்சித்துத் தனதுஇருப்பிடஞ் சென்று சுகமாகவாழ்ந்திருந்தனள்.

களஙகமுழுவதும் மகல காமவேளுக்கு அகளஙகனென்று பெயரைத் தநதஇடம் அகளஙகபுரமாகும். இப்புரமானதுதிரு மங்கலததின்கண்ணே எழுநதருளியிருக்கும இளஞ்சந்திரனை த தரிதத எமதுபெருமான் வீற்றிருக்குங கோயிலிலிருத்தலினுல வரமபலகொடுககும் அதன் பெருமையையாவரோசொல்லுவாா வாசனையோடுங் கூடிய மலாகளைப் பாணமாகவுடைய மன்மத னது ஆகததில மணிமுலைகளகலந்து தழுவியு மகிழ்நது நின்ற புன்னுகவிருட்சமிருந்த இடமானது புன்னுகபுர மெனப்படும. அப்பெயரையுரைததவா இடாகல சகலமங்களங்களையுமபெற்று வாழ்வாாகள, என்று சூதமுனிவா் மன்மதன சரித்திரததினைச சொலலிமுடிததவுடன் முனிவராகள்கேட்டு மகிழ்நது வினவு வாா,முனிரததினமே! ஆதியில் சிவபிரானுனவா ஆலினவிரு ட்சததினகீழெழுநதருளி யிருநததற்குக காணமெனனை த திரு வாய்மலாந்தருள வேண்டுமெனப் புராணிகா சொலலததொ டஙகினர்.

தககனென்னும் பிரமாவானவன் முதிர்ந்த தவததினைக கிரமப்படி செய்த பாககியததால, ஆனமகோடிசட்கெலலாம் நறகதியையளிக்கும் கருணைநாயகியாகிய உமாதேவியாா அவ னவீட்டில புததிரியாய்அவதாரஞசெய்து உலகமெலாம்போற் றச்சந்திரனைப்போல வளாநதுவந்தனள், அஙஙனமவளாந்துவ ருகையில தக்கனுனவன் தனதுபுததிரிதககபருவமடைநததை நோககிக கொனறைமாலையினைஅணிந்த குனறவிலலிக்கு விவாகஞ்செயது கொடுதது மகிழ்நதனன். கவுரியை விவாகஞ் செய்துகொண்டு கயிலைமலையில் கண்ணுதலெழுந்தருளி யிருந் தனன், தக்கனும் தாணுவை மருமகனுகப்பெற்ற பாககியத

தால் முப்புவனங்களையும் நீதியாக ஆண்டுவந்தனன் .இந்தப்பிர கார மரசு செய்துவருநாளையில்தககனொரு வேள்விசெய்ய உத் தேசித்து, தேவாகட்கெல்லாம திருமுகமனுப்பிச சிவபிரானுக் குத தெரிவிக்க கயிலாயமலையடைந்தனன், அம்மலையில் அம்ம ணியாரோடு ஆலமறகடவுள் ஆதனததின்கண்ணே எழுந்தரு ளியிருந்த வணணததைக்கண்டு தனககெழுந்துமரியாதைசெய் யவிலலை யெனப்பேதமையால மனதில் விரோதஙகொண்டு சொல்லுவானாயினன், எசமானன் சேவகனுக்கும், புருடன்ம னைவிககும், ஆசாரியன் சீடனுககுமரியாதைசெய்ய வேணடுவ திலலை, மருமகன்வயதில மூததவனாயினும் மாமன்இளையவ னாயினும் மருகன் மாமனைவணஙகவேண்டுவது முறைமை யாயிருக்க, கொழுந்திளமதி முடிகொண்ட கொன்றைசூடி நம் மைக்கண்டு எழுநதிலன், வணஙகிலன், இன்சொல் சொலலில ன்நெருஙகியசுறறமென்று உழுநதளவுமெண்ணிலன் இன்றே டே இசசிவனுறவு நம்மைவிட்டுநீஙகியது என்று,சினநதுபிரம விஷ்ணேநதிராதியாகளால அறியப்படாதமெய்யுருவைதெரி யாது தோலாடை பூண்டு விளங்குவதே சொரூபமென்று கொ ண்டுவிரோதிததுததானென்றுமபேசாது திருமபிசசிவபிரானி டததில வைததிருநத அனபைஅழிதது,தனதுபுததிரியையுங கழிதது, விபூதி,பாம்பு, தோல,எலும்புமுலலியவற்றையெடு ததுச் சொலலிதூஷித்துஎல்லோருங்கேட்கும்படி நாதனைப்ப ழிதது விட்டுணுவாதிதேவர்களை அழைப்பிதது, அதிசீக்கிர மாகத தூயவேளவியொன்று தொடஙக வாரம்பிததனன். அச் சமயததில அகிலஙகளையெல்லாம் பெறறுபெற்ற அம்மையார் சுவாமியின் திருவடியைவணங்கிச் சொல்வாள் நாதனே! என துதந்தையொரு வேள்விசெய்ய வாரம்பித்தனன் தேவர்களெ ல்லாம்போய் அவ்விடம்நெருங்கினர்கள் நாமிருவர்மாத்திரமி

ங்குற்றேரும் நாமுமவ்விடம் அணைதல்வேண்டும், தக்கன் சிறு விதியென்று செம்மலாகியநீவிர அவ்விடம்வாரததகாதெனி னும் நான்போக விடைதரல் வேண்டுமென்றனள். அதைககே ட்ட பெருமான் மாதே! அததக்கன் மாறுகொண்டு மகமவளா ககின்முன், அது நாசமாகிவிடும் நீஅவ்விடம்சென்ருல வேறு பாட்டுடன் தேகததைவெறுககும படிவரும்! வரும்!! என்றனா இநதப்பிரகாரம் நாயகருணாததும் பெண்புததியால் கேளாதவ ளாகி அவசியம் போகவேணடுமென்று, மனதிலெண்ணி, தன னாததணாநது செலலுவதற்குமுன சுவாமியறிநது, சிவகண ஙகளையும் உடன்செல்லுமபடி நநதிககுக கட்டளையிட்டனா அஙஙனமே நந்தியெமபெருமான வாததிய முழஙகிககொண டிருககும் வாயிலில கொடிகளோடளாவும படைககணததவாக குக கூறினா, உடனே, கணஙகளும், கணநாதாகளும், பாஙகி யாகளும், நெருங்கி எப்பககததினும்சூழ்நதனா. அழகியவாபர ணஙகள அணிநததோளையுடைய அமமையாாவேளவியஞ்சாலை யை நெருஙகிததனது தநதையையடுத்தனள், தநதை யாதொ ருசநதோஷமுஙகொள்ளாது ஊமைப்போலிருநதனன, தாயா ளைசசமீபிததனள அவளுமப்படியே மவுனமாக விருநதனள், மறறையோரு மஙஙனமே வாயமூடியிருந்தனா. இந்தப்பிரகார மாய் யாருமிருந்த தனமையைத தனக்குததானே யொப்பாகிய தலைவியானவள் தன்னை அவமதிததிருந்த அமரர்தங்களையும் முனிவரர்கூட்டததையும் கோபததோடு பார்த்துச் சிலமொழி செப்புவாளாயினள.

எல்லாம்வல்ல ஈச்சுரனுகியும், எவர்க்குமேலாயிருப்பவனு யும், உலகமெல்லாந் தோனறுதற்கு நிமித்தகாரணனுகியும், கல் லவர்களாலே வணங்கப்படுபவனுயுமிருககின்ற உருத்திரனெ

ருவனேயல்லால் இவ்வேள்வியில் நீர்கொடுக்கும் அவிர்ப்பாகத
தை ஏற்றுககொள்ளததக்கவர்கள்வேறுளரோ?வேள்வியுமவரோ,
அவ்வேள்விமந்திரஙகளுமவரோ, வேள்வியைநடததுபவருமவ
ரே, வேள்வியெசமானனுமவரோ, வேள்வியினக்கினியுமவரோ
வேள்விப்பசுவுமவரோ, வேள்வியின்உணவுமவரே, வேள்வியில்,
விடுமநெய்யுமவரோ, வேள்வியின்மனுவுமவரோ, வேளவிப்பொ
ருளுமதன்பயனுமரோ, வேள்விததொழிலுமதன்பிரயோசனமு
மவரோ, வேள்விககுப்பலனருளுபவருமவரோ, வேள்விப்பயன
னைத்தையுமேற்பவருமவரோ, சகலவிததைசகும், சகலபூததிற
கும், பிரமனுக்கும்தேவனவரோ, பிரணவசொரூபருமவரோ, துஷ
டர்களைததண்டிதது இஷடர்களைககாத்துத தருமததினைநிலைநி
றுத்தி அட்டமூரததியாய்த் தததுவாதீதராய் அவாஙமனோகோ
ரப்பரஞ்சோதியாம பராபரருமவரோயாம, அகிலகாரணராய, அரு
மறைகளின முடிவில் திகழ்கினற சோரூபராய, திரிபுரதகன
ராயிருக்கும பகவனை ஈசசுரனிடததனறி வேள்வியினவிரப்
பாகம வேறொருவரபால் பொருநதுவதிலலை, சுததததுவன,
சசசிதானநதன, அததுவிதன, முததன, முததியையளிப்பவன
எனவேதமுழஙகும் பெருமானுககு அவியையளிததிடாத உத
தமவேளவி யெவ்வாறு உஙகளுக்கு நிறைவேறும. மததகத
தோடுஙகூடிய பெரியயானையானது உண்ணுமகவளததினின
றுஞ்சிநதும அணுககளை ஆதாரமாககொணடு எறும்புகளசீவிக
குமாறுபோலச சிவபெருமானுககென்று வேள்வியிலகொடுக
கும அவிப்பாகததிலமறறையதேவாகட்கும பாகமுண்டாவதா
கும் இஙஙனமனறி வேறுவிதமாகச் சாததிரஙகள சொல்லுமா
யின ஆராயநது இப்போது என்முன்சொல்லுஙகள்எனறுசபை
யுளோாகேட்கவாளபோனறவிழியினையுடையசததியெனுமன்
னைகூறினள்.

தொய்யலதீட்டியமெலலிய முலைகளையுடைய அம்மணி யாரஉண்மையைகூறசசூரியனகேட்டுசசிரிததனன், சோமன் முகததைமுறுககினன, பிருகுமீசையைச்செஙகையால தீததி னன, பகனவிழிகளைசசுரிததனன, அககினிகரஙகளைத தாககி னன, சிலாதலையசைததனா, சிலாஉதட்டைப்பிதிககினா, சிலா கரமசைததனா, சிலாகோபததோடுபாாததனா, சிலாமாாபைநெ ளிததனா, சிலாகாலைஅசைததனா. இநதப்பிரகாரமெல்லாரும அவமதிததிருததனா, கருநதாளுகிய கணணுதலையாவரு மிக முநதமை கணடு கணகளிரணடுஞ சிவககப்பாாதது, புருவநெ ளித்து, சேயிதழ்துடிப்பஉருததிராணி இவவாறுசொலவாளாயி னுள். நடுநிலைமையினின்றுந் தவறுநல தாஙகளகெடுவதறகுக காரணமலலது வேறிலலை, புரஙகளையெரிததோனே வையகம னைததிறகுஞ்சாததாவாய விளஙகுகினறபடியாலஅவனேவந்து உஙகளை அதிசீககிரமாகத தணடிபபன, இப்பாவிததககனுககு ப்புததிரியாக வநதவிநதவுடல இனிமேல காவியையொ ததகணடன் பாலிருததறகு யோககியமன்று இதனைநீதது வாழ்வதே உததமமாகுமென யோகததினுல வேள்விசசாலை யிலோஙகி வளர்கினற அககினியிலிறஙகித தன்னுடலைநீககி இமயமலையரசன்பால் போய்ப்புததிரியாய் அவதாரஞ்செய்தன ள,வாசனையோடுங்கூடிய கூநதலையுடைய தேவியானவள அன லிலே முழுகினவுடன் சிலர்பயநதும, சிலாநடுங்கியும், சிலா சைவறறும்,சிலரோடியுமொளித்தாகள், இச்சஙகதியைச்சிலர் ஓடிக்கயிலையையடைநதுககைவேணியன் பாலுணாததமாத திரத்தில் கடுங்கோபஙகொண்டு தன்னுடையசிரசிலுள்ளவோர் சடையைத்தரையின்மீது மோதினா. அதினின்றும்வீரபததிர க்கடவுளெழுந்து உருத்திரக்கடவுளின் கோபமெல்லாமோரு வாய்த்திரண்டாலென்ன வெளிவந்த ஒப்பறற வீரனுனவன்

பலம்பொருந்திய ஆயுதத்தையுடையகரததினனாய்க் கோபாக்கி னியையுடையவனாயத தந்தையின்மலரடிபணிநது நின்றனன். வணங்கினறவீரனை வளளலகண்டு விளமபுவார், வீரபததிர னே! எனதுவாமபாகததி லெழுநதருளியிருந்த அணங்கினை அவமதிததுஅவள்மாய்வுறச்செய்த தககனவேள்வியையடுத்து அவ்விடததுத் தேவர்களியாவரையும கணடதுண்டம புரிநது வரக்கடவையென்றனா,அருளிச்செய்வதற்குமுனனமேஅழல் கொழுந்து விட்டெரிந்தாலென்ன அதிககோபாவேசத்தனாய் இருளே யுருவங்கொண்டாலபோலவிருககும் தேகததில அக கினியானது சூழவேகி வேளவிச்சாலையையடைநதனன், எட் டுதிக்குகளிலேயும் வானத்திலேயும், பிலததுவாரஙகளிலேயு ம்தேவாகளஓடாதபடி,சாரததலைவர்களையனுப்பிககாவல்வை ததுவிட்டுத தனககு வீரனெனறபெயரைவிளககும்படி வில்லி னைப்பிடிததுப்பலகோரமான அம்புகளை அதிசீககிரமாகததூண் டிச் சாரதப்படைசூழச் சண்டையாரம்பிததனன், யானைககூட் டத்தில் சிஙகநுழைநதமாததிரத்து அவைகள்குழைநதுகலங்கி னாலென்ன ஆயுதஙகளைத்தாங்கிய அணடாகள தஙகளுக்குரிய அமரனெனனும் பெயரையொழிததனர். தககன் தலையினையும், எச்சனதலையினையும அறிந்து அழலிலிட்டனன், அககினியின் கரங்களை அறுததனன, சூரியன்பற்களை உடைத்தனன, பகன கண்களைப்பிடுஙகினன, சந்திரனை ததரையோடு தேய்ததனன், பிருகுவினமீசையை நீககினன, அரனைஅவமதித்த அவரவருக கு்த தககதண்டனைகளைச்செய்தனன். சிலாதலையற்றனா, சிலா நாவற்றனா, சிலாகரமற்றனர், சிலாகாதற்றனா, சிலர்மூக்கற்ற னர்,சிலருரமற்றனா,சிலர்காலற்றனா,பூமியிலேமறைந்தார்சிலர் சலததிலேமறைந்தாாசிலா,ஆகாயததிலேமறைந்தாாசிலர்,மேக ததிலேமறைந்தாாசிலா,பிணஙகளை யொததார்சிலர், அப்பிணங

களிலொளித்தார்சிலர், பிணங்கள்சிதறுண்டகிணத்திலே பதுங னர் சிலர், பிணங்களினின்றுஞ்சரிந்த குடல்கூட்டங்களில்ஒடு ஙினர் சிலர், என்செய்வார்பாவம்! பாவம்!! மற்றோரோடி ஓடி பிரமனையும்விண்டுவையும் அடுத்தனர் அவர்களோடி வீரபத்திர க்கடவுள் திருவடியிற்பணிந்து வணங்கிநின்றனர், இந்தப்பி ரகாரம் ஒருவீரனைக் கொண்டே அமரர்கள் வலியாவுங்கெடச் செய்து அரவாபரணராகிய பெருமானனவர் இமயமலையடிவா ரத் தவம்புரிந்துகொண்டிருந்த தேவராந்தனென்னுமரசனுக்குப் பகையைச்செயிக்க அவ்விலைகொடுத்துவிட்டார். இப்பால் பிரமதேவர்கட்டளைப்படி தேவர்களெல்லாம் அரியதவஞ்செய்ய ஆரம்பித்தனர், நெடுநாளரிய தவஞ்செய்துவந்த அமரருக்கிர ங்கி அந்திவண்ணனனவர் பெரிதானவரங்களைத்தந்து தக்கனு க்கு ஆட்டுத்தலையைத்தாபித்து ஆன்மாக்களெல்லாம் உச்சீவிக் கும்படிகங்கைநதி தீரத்தில் ஆகாயத்தையளாவிய புன்னைகவி ருட்ச நீழலில் யோகுகூடி யிருந்தருளினர் மாதவத்தீர்! எம பெருமான யோகிருந்தகாரணத்தையெடுத்துரைத்தோம் இமை யவர்க்கெல்லாம முகமாகவிளங்கும அக்கினிதேவர்கொடுஞ்சா பமுற்றுக்கொன்றை யணிநதோன திருவருளால்விலவ்வனத திலஒழித்தவாறு விளம்புவாமென்றனர்வியாச மாணக்கர்.

மன்மதன்வழிபடுசருக்கமுற்றிற்று.

---

## அக்கினிசாபந்தீர்த்தசருக்கம்.

---

மலைக்கு மன்னவனகிய மதிதவழப்பெற்ற இமயமலைக்கு நன்மகளாகிய தேவியானவள் உலகத்தின் துன்பமழையைத்தையும் போக்கவும், சுகமனைத்தையு முண்டாக்கவும் பழைமையாகவே

நிலைததிருக்குந தனது அனபனை யடைகுவான் நெடுந்தவஞ் செயதுவநதாள, அரவையும் அன்றுபூத்த கொன்றைமாலையினை யுமணிநது புனனைகவிருட்சததின் கீழிருப்பவர் ஓர் திருவிளை யாட்டினைச் செய்வானவேண்டி பேரழகுவாயநத ஒரு பிரமசா ரிவடிவமாக மாறி, அம்மணியாா தவச்சாலையை யடைநதாா. முஞ்சிப்பிலலால அரைஞாணை நு விளஙகுமொற்றை வஸதி ரஇடையும்,முப்புரிநூல மானரோலோடு கிடந்தசையுமாாபும், பலாசுகோலேநதிய கரமுமு, விபூதி சண்ணிதத மேனியுமாக விளஙகும் விரதியரைத தேவியானவளகணடு தனது அனபரா கிய சிவபெருமானுக இவரனபரெனக்கண்டு அகமகிநது எழு நது அவாதிருவடியில புட்பஙகளைததூவி, பசுமையான ஆபர ணஙகளை யணிநத தனது இருகரஙகளையும் கூப்பித தாழநது, தேவரீரிஙகு எழுநதருளியவிதமென்னெனக்கேட்டமாததிர த துப் பிரமசாரியாய்வந்த பிராமணர் விளம்புவார்.

பெண்களுககெல்லாம் உறைவிடமாய்ப் பிரகாசம்வீசப்பெ றற சீரகளைவாயநத நீநாயகனோடு சுகிதது வாழ்வதைவிட்டு நினது திருவுருவ முழுவதும் வாடும்படி, தவஞ்செயதல அழ காகுமோ, மாலையணிநதபூஙகுழலாய்? நீசெய்யும் அரியமாதவத தின உணமையையை யறிந்தனம், கயிலைமலையில வாழும கபா லியை விருமபிச செயகின்றாய், பாம்பும், தோலும, எலுமபும் அணிநது பிததரினும பிததனானவனோ உனது பேரழகனுககு ரியன அனறு! அனறு!!யான்இளமையாலும், வளத்தாலும்,அழ கினாலும உனனைப்பொருந்தி இருககினறேன் ஆகையாலென் னையடைவா யென்றனா, பிரமசாரிவேடங் கொண்டுவநத தனதுநாயகன் சொலலப்பட்ட சொற்களைத் தீயில்காய்ததது எடுதது ஊசியைககாதிற செருகியதெனன தேவியாாகேட்டும்

இருகரங்களாலுஞ் சிவசிவவென்று இரண்டுசெவிகளையும் பொ
த்திக்கொண்டு பதைபதைத்துப் பலதரமுமந்திரஞ் செபித்துக்
கோபித்துச் சொல்லுவாளாயினள்; யாவனொருவன் திருவி
ளையாட்டால் உலகத்திலுள்ள ஆன்மகோடிகட் கெல்லாம் பஞ்
சகிருத்தியஞ் செய்கின்றான், பிரமாதிதேவர்கள் எவனுடைய
திருவருளால் சிருட்டியாதி புரிந்து ஞானத்தையடைகின்ற
னர், அத்தகையகடவுளை என்பொருட்டுஇவ்விடத்து இழிந்து
கூறினாய் அப்பால் நடந்துபோவென்று கூறி, மற்றோரிடத்தி
ற்குப் போம்பொருட்டு அதிகவிரைவாகநடந்தனள். இதைகக
ண்ட பிரமசாரியானவர் தனது நிச்சயவுருவத்தோடு விளங்கி
அம்மணியாரது மேலுத்தரியத்தைப்பிடித்து இழுத்தனர். உட
னே அகிலகாரணியாகிய தேவியார்வெருண்டு, திரும்பிப்பார்த்
துச் செய்யசடையும், வெண்ணீறும், சிறந்த நுதலில கண
மூன்றும், கையிலணிந்த மழுமானும், சரபம்பூண்டமணி
மார்பும், வெய்ய புலிததோலுடுதத அரையும், வேதமாகிய
சிலம்புகளையணிந்ததாளு மெதிர்கண்டனள். கண்டபொழுதே
பெருங்கோபத்தைவிட்டு, பூர்வம்பழகிய சினேகவாசனைபடாந்
துவளர்ந்து கொழுந்துவிட, அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு
என்னுநான்கும் தன்னைவிட்டேகத் தன்னிடத்திலுண்டாகிய
பெருங்காதலையடக்கிக்கொண்டு, முழுதுமுணர்ந்த பேரறிவின்
முதல்வனாகிய கடவுளின்பாதத்தில் வணங்கித்தொழுது நேத
திரங்களின் கண்ணீரிற்குளித்து, நாவானது தழுதழுப்பத்தே
கம் புளகாங்கிதங்கொள்ள, சந்தோஷமிடற்றில்நிரைய இனிய
குளிர்ந்த சொற்களால் உரிமைதோன்றும்படி மொழிகுவாள.

கிரமமறியாதவர்போல உத்தரீயத்தைப்பிடித்துக் குஞ்சி
ரிப்போடு இழுத்துநின்றீர், முக்கண்ணரே! உலகத்திலொழுக

கங்களையெல்லா நிலைநிறுத்திய நினக்குச்சொல்லுவது யாது ளது குற்றமாகியதொழிலைச்செய்தல் வேண்டாம் முந்தானை யை விட்டுவிடும். மாதர்கள் விவாகமாகும்வரையில்தந்தையிட த்தும், விவாகமுடிந்தபின்கணவரிடத்தும்,கணவனுக்குப்பின் புத்திரரிடத்தும் இருத்தல்வேண்டும். எக்காலத்தும் பெண்க ளுக்குச் சுதந்தரங்கிடையாது. பெண்கொள்ளுவதற்குரிய சொந்த சுற்றத்தாராயினும் அப்பெண்ணின் தாய்தந்தையர்கள் சம்மதத்தின்பேரில் பெறவேண்டுமேயன்றி அற்பவறிவுடை யாரபோல இறைவராகிய நீர்செய்தலழகன்றே. பெருமொலியி னைச்செய்யும் யானையின்தோலையுரித்துப்போர்த்து, பிரமனது சிரத்தைக்கொய்து, களிப்போடுகூடியகாலனுயிரைக்கொண்ட கடவுட்சிங்கமே! தேவரீர்கட்டளையை மறுப்பாருலகத்தில்லை, பெருமானே! நின்னையடையும்படியே நானபெருந்தவஞ்செய் கின்றேன். தேவரீரை மருகனுப்படைக்கவே யெனதுதந் தை விருப்பத்தோ டிருக்கின்றான். இங்ஙனமாக இந்தவுலகம பழிக்க இததகைய இழியசெய்கை எற்றுக்கு, என்று நகை முகததோடுகூறி, தளிர்போன்ற கரத்தால் தனது கொஙகை யைபொதிநதுகொண்டிருந்த வஸ்திரத்தை முதல்வனார் கரததி னின்றுமெல்ல இழுத்துககொண்டனள். தலைவர்தாமும் முந் தானையை மெலலவிட்டுக் கயிலையையடைந்தார். பின்னர் சிவபெருமான் வசிட்டனாதிமுனிவர்க ளெழுவரையு நினைதத மாத்திரததில் அவர்கள்கருத்தறிந்து திருவடிபணிந்து நின்றார். நாதனாரவர்களைநோக்கிச் சொல்லுவார், முனிவீர்! பகையாளி கட்குப் பின்வாங்காத வல்லமைவாய்ந்த இமயமலையரசன்பாற் சென்று, தனது புத்திரியை நமக்கு விவாகஞ்செய்துகொடுக் கும்வண்ணங்கிரமமாகப்பேசி, விவாகவரைகளும் நிச்சயித்துக் கொண்டு, மடவாரோடுவந்து சேருமினென்றனர். எம்பிரான்

நமக்குக்கட்டளையிடவென்னதவஞ்செய்தோமென்றமுனிவர்
களெழுவருந் தங்கள்பதநினியரோடு தேவலோகத்தையளாவி
நிற்கும் இமயமலையையடுத்து, அரசனுக்குத் தங்கள்வரவைச்
சொல்லியனுப்பினார்கள். தூதுவர்களோடிவந்து சங்கதியைக்
காதுநிரம்பச்சொல்லியமாததிரதது,முனிவர்களிவ்விடமெழுந்
தருள வென்ன தவஞ்செய்தோமென்று, தங்கள் சுற்றத்தா
ரோடு சந்தோஷமிகத் தனது மலையினின்று நீங்கி, எதிர்கொ
ண்டுசென்று, அருக்கிய பாத்தியமாதிகொடுதது, வீட்டிற்க
ழைத்துக்கொண்டுபோய் ஆசனமிட்டு எழுநதருளச்செய்து
பூசைபுரிந்து வணங்கி மாதவர்களைநோக்கி தேனடைகளைச
சுமந்த சிகரங்களையுடைய இமயமலையினுக் கரையன் சொல்லு
வான்.

நெருங்கிய நீண்ட சடையினையுடையஅந்தணீர்! கண்
களாற்பெறும் பிரயோசனமிதுகாறும் பெறறேனில்லை இன்று
தானடைந்தேன். சகலசெல்வங்களையும பெற்றேனாயினேன்,
பரிசுத்தமடைந்தேன், வினைகள்யாவும்விட்டுநீங்கினேன், மஙக
லங்கள் எல்லாவற்றினுக்குங் காரணமாய் மலிநதது உஙகளு
டைய நல்லவரவு, உம்முடைய அருளினாலேயே எல்லாரும்
சகல வின்பத்தோடு வாழுகின்றனா, ஆகையினால் உங்களுககு
வேண்டுவதொன்றுமில்லை யேனும், இவ்விடத்தில் தாஙகள்
வநதெழுந்தருளியதற்குக் காரணமியம்பவேணடுமென வேண்
டிக்கொண்டனன், முப்புரங்களைமுடித்த முன்னவன் கட்ட
ளைப்படிவந்தவர்கள் அரசனது ஆவலைநோககி அறைகுவார்.
மலைகட்கெல்லா மரசனே! குற்றமற்ற தவங்களெலலாவற்றி
னுக்கும் பிறப்பிடமாய் நிற்கின்றவனே! உன்னுடைய சொல்
லுக்கு மாறுசொல்லுகின்றவர்யாரிருக்கின்றார்கள். எங்களுடை
யவரவானது இவ்வுலகமுழுவதுக்கு மங்கலத்தைத்தருவதாக

விருக்கும். தக்கனது புத்திரியென்று சொல்லப்படுஞ் சதியெ னுந்தலைவி அத்தக்கனதுவேள்வியில் உடலினைநீக்கி உனக்குத் தக்கமகளாய்யவதரித்தனள். அத்தக்கனதுவேள்வியையும் அழித்துச் சுவாமியெழுந்தருளியிருககிறா. மலைகட்கெலலா மன னவனே! நினதுபுததிரியானவள் மேருவை வில்லாகவேநதிய நாதருக்கே மனைவியாகவேண்டுமென்னு முரிமைவாய்ந்து தவஞ்செய்தனள். அநேகமான பிறவிகளில் நீசெய்த பெருநதவத்தால் சிவபெருமானை மருகனுகப்பெற்றாய் என்று மாதவர்கூற லும், இமவரையரசன்சொல்லுவான். நான்மறைமுனிவீர்காள! எனது புத்திரியைக் கொன்றைமாலைக்கடவுளுககே உரியளாம் படி நீங்கள் குறித்தமையால், வாசனையோடுங்கூடிய கூநதலை வாய்ந்த குமரியின் தவமபலிததது. காளியோடு வாதாடினவரும், கடலினையே பாயலாககொண்டோனை அம்பாக எவினவருமாகிய பெருமானுக்கு, என்சுபுத்திரியைக கொடுப்பதற் கிசைந்தேன். பெருமான் விவாகத்தினை முடித்தற்கெழுந்தருள ட்டும் என்றனன். எழுமுனிவர்களும் மகிழ்ச்சிகொண்டனர். அச்சமயததில் மலையரையன் மடிமீதெழுந்தருளி வெட்கமுடன் தன்தலையைக் கவிழ்த்துக்கொண்டு வளையல்களை யெண்ணிக்கொண்டிருக்கு மகாதேவியை, அருந்ததியாதி முனிபத்தினிகள் தங்கள் மடிமீதிருத்திச் சந்தனம், குங்குமம், கனி, தாம்பூலம், புட்பமாலைமுதலிய மங்கலவாழ்ததோடுகொடுக்க, மாதவர் வேதமோதி மந்திரத்தால் அட்சதைதெளிக்க, சுந்தரமாக ஆலாத்திசுழற்றினர். பின்னர் பூந்தோகையன்ன பருவதபுத்திரியானவள் பற்றலர் புரங்களையெரித்த பரமன்பால் சொந்தமாயினளென்பதற் கடையாளமாக *கையுறையீந்து,

*கையுறையென்பது தலைமகன் தலைவிககுததரும்பொருளை.

இமவானிடத்தில் விடைகொண்டு அவ்விடம்விட்டு நீங்கி வெள்ளியங்கிரியடுத்துச் சொலவர் விமலனே! தேன்தங்கிய மலரிணையணிந்த கூந்தலில் கடுக்கைமாலையானது சினேகிக்க வேண்டுவதுதான் இனிநடக்கவேண்டுவது, என்றுரைத்துஒரு பக்க மொதுங்கிநின்றனர். கண்ணுதல்மூர்த்தியானவர் கருணை நோக்கமும் வரங்களுங் குற்றமற்றமுனிவருக்கீந்தருளி, மற்ற வர்களெல்லாம்வரும்படி, திருமுகமெழுதிப் பூதர்கைகொடுக்க அவர்கள் வணங்கிவாங்கிக்கொண்டு பலவிடங்கட்குச் சென் றீந்தனர்.

அண்டத்தின்மீதெழுந்தருளியிருக்கும் வீரபத்திரக்கட வுளும், பூர்வகாலத்தில் விஷ்ணுவின் முதுகெலும்பையெடுத்த வைரவக்கடவுளும், மேகநிறத்து விஷ்ணுவாகிய மோகினி யை இறைவன்கலந்துபெற்ற அரிகரபுத்திரக்கடவுளும், பாதா ளத்திலமரும் காலாக்கினிருத்திரரும், ஆடகேச்சுரரும், கூர்மா ண்டரும், பதினொருருத்திரர்களும் அநேகமான பூதகணங்க ளும், கயிலாயம்வந்தடைந்தனர். முப்பத்துமூன்றுவிததேவர்க ளும், நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும், பிரமனும், விஷ் ணுவும் வந்து சேர்ந்தனர். திரிபுரதகனராகிய சிவபெருமானும் இடபவாகனத்தின்மீது எழுந்தருளினர். முரசவாத்தியமுழங் கின, சங்குநாதங்கோஷித்தன, தேவர் புஷ்பமாரிபொழிந்த னர், சாமரைகள்வீசினர், யாவர்களும்வந்து இமயமலையை நெருங்கினர். கயிலாசபதி எழுந்தருளியதையறிந்து இமைய வரசன் பலவிதமான வரிசைகளைக்கொண்டு தனது நகரைக் கடந்து எதிர்கொண்டுவணங்க, சூலபாணியார் அருள்புரிந்து இடபவாகனத்தினின்றுங் கீழிறங்கினர். அரியமாதவத்தினை செய்த மலையரசன் தனது கரத்தைநீட்டலும் அக்கரத்தைப்

பெருமான் பற்றிக்கொண்டு வேதசொருபமாகிய மிதியடியை காலில்தொடுத்து, தேனுனது ததும்பிக்கொண் டிராணின்ற, கொன்றைமாலையானது சடையின்மீது பிரகாசிக்க, மெள்ள அவனது வீட்டினுள்ளே பிரவேசித்தனர். உடனே அரசன் பூசைநடத்தவேற்று, புதிதாக அலங்காரஞ்செய்யப்பட்டிருக் கிற கல்யாணமணடபததின் மத்தியிலிட்டுள்ள சிங்காசனத் தின்மீது சந்திரசேகரர் வீற்றிருந்தருளினார். இமவானும் விதி யின்படி தனது கன்னிகையைத் தத்தஞ்செய்து தந்தனன். இடபகொடியரும் எற்றுககொண்டு முனிவர்களால அகக்னி யின்முன் செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் செய் வித்து, பிரமாதிதேவர்கட்கெல்லாம் விடையீந்து அம்மையா ருடன் ஐயன் அழகுடன் ஆலிங்கனஞ்செய்தெழுந்தருளினர். பூவுலகின்கண் மாதாகட்குக் கணவர்களது புணர்ச்சியிலு லும்,கருத்திலும், சலிப்படையாத முற்கால மானதலினல் தேவவருடங்களுள் ஆயிரம்வருடம் ஞானக்கலவி நடந்தும், நீலோற்பலத்தை நேர்நதவிழிகளையுடைய அம்மையாரிடததுக் கருதரித்திலது, இதனைத்தேவர்களறிந்து கண்ணுதற்கடவுள் கௌரியினிடத்து நீங்குதலில்லாத சையோகஞ்செய்தலின் நமது இடரெலாநீக்கும் புத்திரனொருவன்தரிததிலன் என்று நீறுபூசிய நின்மலரது கலவிககொருமுடிவு செய்தாலல்லது கருதறியாது வேறுமந்திரமுமில்லையெனத் தீர்மானித்துத தேவேந்திரனவன் தேவர்கூட்டத்தாரைப்பார்த்துச் சொல் லுவாறாயினன்.

இமையமலைக்கோயிலில் எமதுபெருமான் உமாதேவி யாரோடுசெய்யும் கலவித்தொழிலினை நீக்குவதற்கு யான்செல் லுவன். என்னைவிட்டு நீங்கள் பிரிந்திருக்கமாட்டீர்களாகலின்

உங்களில் யார்செல்லக்கியைவது எனறு எமனை யழைப்பித்த னன், அவனும்வந்துவணங்கினன், அவனைப்பாரத்து நமனே! இப்பெரியவுலகமெங்கணு மியங்குகின்ற வல்லமையுடையோ ய்கருப்பத்தின்கண்ணேயிருக்கும் உயிரினையும் பிரிக்கததகுந்த தன்மையையுடையாய் ஆகையால், நீ நிருமலனது கலவியை நீக்கிவருவாய் என்றனன். இதைககேட்ட நமன் இந்திரனை நோககியிசைப்பான், உயிர்களுக்கெல்லாங் காலனாகிய என்னை யுங்கொன்று காலகாலனென்னும் பெயரையுடைய கடவுளி னது திருவடியின்சமீபத்தில் அடியேன் நெருஙகவல்லவனோ சென்றால மாளுவேன் யென்னால் முடியாதென்று நீஙகிவிட டனன். பின்னர் வருணனையழைத்து நீ இப்பூமியினரியவிட முழுதுஞ் செல்லத்தகுந்தபெருவலியினையுடையை நீ அமல னது திருவிளையாடலைச்சிதைத்து வருகவென்றனன். வரு ணன் வலாரியை நோக்கியுரைப்பான், எனக்குக்கீழேசெல்லுங் கதியினை யுடையவனேயன்றி மேலேசெல்லு மாற்றலுடை யனல்லேன். முன்னொருகாலத்தில் பெருமான்றிருவடியில் பத்திவாய்ந்த ஒருமுனிவனிடத்து அடங்கிவிட்டவனாகிய நா னென்செய்வேனென்றான். பின்பு வாயுவைநோக்க அவன் வணங்கினின்றனன். அன்பினையூட்டுந் தென்றலோனே! கல விசெய்பவர்க ளெல்லாராலும் நீவிரும்பப்படுவை ஆகையால் நீ அந்திவண்ணனன்பால் செல்கென்றான். வாயுபகவான் வச்சிர பாணியைநோக்கிக்கூறுவான். சஞ்சரிக்குங்கதியினையுடைய கனேயல்லது ஆகாயத்தையளாவிய அம்மலையின்மீதுசெல்லு மாற்றலுடையவனோசென்றால் அரன் அலஙகாரமாகப்பூண்டிரு க்கும் அராவொன்று என்னைவிழுஙகியேப்பமிடுமேயென்செய் வேனென்று நீங்கினான். அதன்பின் குபேரனையழைத்து நீபெ ருமானது உடலினுக்கும் உயிரினுக்கும் உவப்பைசசெய்கின்ற

தோழமைபூண்டவனுகையால் விடமுண்டகண்டன்பால்செல் கென்றனன். குபேரன்கோபதியைப்பார்த்துக்கூறுவான், முன் னே ஒருகாலத்தில் அம்மையார் திருவடியை யுற்றுப்பார்த்தலி ஞலே ஒருகண்ணை யிழந்தேன் யிப்போது மற்றொருகண்ணையு மிழக்கசெய்கின்றனையோ எனலுல் முடியாதென்று ஏகினன். அதன்பின்பு சூரியனைநோக்கி நீபெருமானுக்குக்கணுகை விள ஙகுகினறனை அவரட்டமூர்த்தங்களிலொன்ருயுமிருக்கின்றனை கருமஙகட்கெலலாம் நற்சாட்சியா யிருக்கினறனை ஆகையால் கணணுதல் கலவியை கழிப்பாயென்றனன். சூரியன் சுரேச னைப்பார்த்துக்கூறுவான் தக்கன்யாகததில் தாடையிலறைந்த அரையாலா பல்லுதிர்ந்த பயமின்று நீஙகவில்லையேயென்செய வேனெனறு நீங்கினன். பிற்பாடு சநதிரனையழைததது மங்கை கள்கலவிசெய்து கொணடிருக்குஙகாலததிலு நீ செல்லுதற் குரியவனுகையால் நீசெனறு அங்கணன்தொழிலை யழிப்பா யென்றனன. சந்திரன சதுமுகனைப்பாாததுச சாற்றுவான், பூாவததில தககனவேள்வியில வீரபத்திரக்கடவுள் காலினுல் முகநதேய்ககப்பட்டேன் இப்போது நினைககுந்தோறும் சிந் தை நோகின்றது, எனது ஒருகலையினைககடவுள் தரிக்காரேல் நான்செததவிடம் புல்முளைததிருககுமேயென்செய்வேன் என் ஞல்முடியாதென்றனன. அஷ்டவசுககளுளொருவனை சாத் திரனையழைத்து சங்கரன்பால் செல்லெலன்றனன். சதமக னே! முன்னமே மீசையோடு மேலுதடு மறுபட்டு வாழ்ந்த னன் இன்னமுமயிா முளைக்கவில்லை யென்செய்வேன என் ஞல முடியாதென் றேகினன். தேவர்களையெல்லாம் வெவ் வேறு அழைத்து இவ்வாறு கூறியும் அவர்களால முடியாதெ ன்று போய்விட்ட மாததிரதது அக்கினிதேவனை யழைததது அறைகுவான். செம்மையைவாய்ந்த தேவர்களுக்கெல்லாங்

திருமுகமாகிவிளங்கி எக்காலத்தும் அமரர்கட்கும் தேவர்கட்கு மவ்விய கவ்வியங்களைப் பரிசுத்தமாக வுதவு மாண்மையினை வாய்ந்த தோன்றலாகிய வுனக்குச் செல்லக்கூடாத விடமு முளதோ வெவ்விடத்துஞ் செல்லுதல் நினக்கு எளிமையே யாகும், வடவாக்கினியாயும், உதராக்கினியாயும், பூமியினி டத்துப் பாகஞ்செய்யுஞ் சுடர்விடுகின்ற வெரியாயும், தோலா தபிராமணர்கள் நித்தமவளாக்கும் தினவக்கினியாயும், வேள்வி யக்கினியாயும் யாவருக்கு முதவிபுரிபவன் நீயேயன்றோ? ஆகையால் சூரனால்வருந்தானின்ற துன்பத்தை நாமொழியும வண்ணம், சாபாபரணங்களையணிந்த சாம்பவியானவளொருபு த்திரனைத்தருதல் வேண்டும்சங்கரன அவ்வமமணியாரோடுநீங் காத கலவிநெடுநாள் செய்து கொண்டிருத்தலின் கருதரித தி லள் ஆகலின் நறியதேன் தேக்கெடுக்கும் சிகரங்களைவாய்த மலையினிடத்துச் செல்லும்வல்லமை மேலோங்கியெழுமழலை யைவாய்ந்தநினக்கலலது வேறுயாவருக்குண்டு பெரிய திருப் பாற்கடலிடத்துண்டாகிய வமுதத்தை யுண்ணவாதுசெய்தவ மரருக குண்டாகுமோ சகலபாங்கியங்களையும் வாய்நதவனே பெருமானது மலைக்குச் செல்லுவாய், சென்றவுடன் நீதேவர் கட்காகவுதவிபுரிந்தாயென்று நின்மலன்தனது கலவினியின்று நீங்குவார் அப்போது அவனைநீசார்ந்து தம்பிரானே! தத்துவம ருளவேண்டுமென வேதத்துவாய் அதற்கவரிசைந்து உபதேசிக கையில் நாள்பலவாய்விடும். அந்தக்காலநீட்டிப்பால் கவுரியினி டத்துக்கருப்பமுண்டாகி நாமெல்லாமுய்யும்வண்ணம் ஒப்பற் றவொருகுமரன் அவதாரஞ்செய்வான். பூமியினமீதுநமக்குண் டாகிய விடரெலலாமொழிந்து போகும், சகலநன்மைகளுமு ண்டாகும. இத்தகைய நன்மையின்பொருட்டு நீசெல்லக்கட வாயென்றனா. செந்தழற்பெருமானாகிய அக்கினிதேவன்கே

ட்டுத தேவேந்திரன் முகததைப்பார்த்துச் சொல்வான், மூக்க ணமூர்த்திகக்கிசையாத காரியத்தைச்செய்து இவ்வுலகில்பிழை த்தவர்களுண்டா இல்லை!இல்லை!! புட்பபாணததைவாய்ந்தவனு கிய மன்மதனுககு நான் துணைவனுவேனெனபதில் சநதேகமி ல்லை ஆயினும், தன்னிடத்துள்ள பொருள்களெலலாவற்றையு மொழிததேயரயினும் உடல், பொருள் ஆவிமூன்றையுந்தத்தஞ் செய்தாயினும், தேகத்தை யழித்தாயினும், ஒருவருக்குதவிபுரி தல் உயிர்கட்கிதமாகையால உங்கள் இஷ்டப்படி நான்செய்கி றேன் நீஙகள் கொண்டிருக்குந துன்பததை யொழிமின் நான் மடிந்தாயினுமுங்கள் கருமததை முடிப்பேன் என்று, அஙகிருந் ததேவாகள் முகங்களெலலாம் சநதோஷிகக அதிகசீககிரமாக வெழுந்து புருவடிவங்கொண்டு அனேகமான காவல்களையும் துன்பங்களையுங்கடந்து கண்ணுதல் ஞானக்கலவிநடத்துஞ்சப் ரமஞ்சத்தின் பக்கததிலிறங்கினன். அங்ஙகையினிடததும, நெ ற்றிக்கணணிடததும அக்கினியையுடைய ஆணடவன்கணடு அககினிதேவனே இங்குவந்து விட்டானென்று தெரிந்துதன து ஞானக்கலவியினின்று நீங்கிவிட்டனர். தேவியாரிதனைக கண்டு அதிகநாணமடைந்து கோபாக்கினிமூள, வஸ்திரததி னை யதிசீககிரமாக உடுததிககொண்டு கலவிகாலத்திற்சிறிது சிவந்த கண்களானவை கோவைப்பழம்போ லதிகமாகசசிவக கச் சொல்லுவாளாயினள். அலைந்து எரிகின்ற சிகையினை வாய்ந்த அக்கினியாகியகள்ளனே! நீபெண்ணுேடுபிறவாதவன் போல, கல்போன்றநெஞ்சினைவாய்ந்து, புறவுவேடங்கொண் டு இங்குவந்தனை, நீயெந்நாளுமிப்புறவேயாகி நினது சகோத ரத்தினைப்புணர்ந்து, தூதுணங்கற்களையுணவர்கவுண்டு, வருந் தக்கடவா யென்றனள், அழற்கடவுள் கேட்டுப்பெருமூச்செ றிந்து தேகநடுங்கத் தப்புசெய்து விட்டோமென்று தளர்ந்து அரனடியில்வீழ்ந்து தோத்தரிப்பானுயினன்.

அடியனே னடிகள் செய்ய வடியைவந் தடுத்தேனேலங்
கடவுள ருய்ய வன்று கடலினஞ் சயின்ற யோல
முடிவதாய் முடிப்பதாகி முடிபய ணுகியநதத
தொடர்பய னளிப்ப தாகித துலங்கிய பொருளேயோலம்.

வீரனுற் றேவர் தம்மோ டென்னேயும் வீட்டும் வீறு
மாரனு ருடல நீற்று மானமு முருத செய்தோர்
கோலமா ரிடும்பைச் சேற்றுட் குரங்கிய செயலு மற்றுந்
தீரநா னறியா தீங்குச் சேர்ந்திலேன் றேவர் தேவே.

இந்திராதிதேவர்கள் எல்லோருங்கூடித்தங்களுக்குத்துன் பத்தினைச்செய்து வரும் சூரனையொழிக்கும்படி ஒருபுதல்வன் தேவியார்வயிற்றி லவதாரஞ்செய்ய வேண்டுமென்னும் விருப் பததோடு நீங்காததோர் ஞானக்கலவியைத தடுக்கும்படி அடி யேனே யேவினுர்கள், தத்துவவுபதேசம் தேவரீரருளிச்செய்வீ ரென்றும், அநாதியானஆணவமலமடியேனை விட்டு அடியோடு போகும்படியான பாக்கியம் வாய்க்குமென்றும், மோட்சசாம் பிராச்சியமும் பெறலாமென்று மொழிந்திட்டார்கள். ஆகையி ஞலே அமரரின்பொருட்டு அவுணருடையதூதர்கட்குப்பயந்து புருவடிவங்கொண்டுபெருமானையடுத்தேன் அம்மணியாா சா பமுமடுத்தேன். தேவரீர் திருவடியையடைநதவர்கட்குத் தீங குவிளைதல்நன்றாமோ உடனேதவிர்த்து ஆளலவேண்டும் அடி யார்களின்பொருட்டு நீவிருப்பு, வெறுப்புகொண்டு விளஙகுகி ன்றீரேயன்றி அவைத்தேவரீரை வந்தடையுமோ? தேவர்கள் வேண்டியபயனைத் தந்தருள வேண்டுமெனறு பலவாறுபுலம் பித்தாண்டவஞ்செய்யும் பாதத்தில்விழுநது அழுதனன். அப் போது சங்கரன, சரணுகதியென்று வீழ்நது புலமபும் அக்கி னிதேவனேககாக்க வேண்டித் தேவியை நோககிதேவியே!

ஒருசிறுதுரும்பானது உண்டு உமிழுந்தீத்தேவன் நினதுகோப ததினுககு இலக்காவனு? ஆகான்! ஆகான்!! என்றுரைத்து அக்கினியின் முகததைப்பாாதது அரைகுவார்.

இமையவர்கள் இடுக்கணைத் தீரக்கவேண்டி இவ்விடத தெயதிய அழலோனே! இப்போது நீநமது ஞானவீரியததை வாங்கிநணபுற உணணககடவாய், அதனைநீதாங்கிக்கொண்டி ருககுமளவும் உமையவள் சாபம் உன்னைச்சாராது அது நீஙகி யபின் சாபம்வநதடையும், அததகைய நீங்குதற்கருமையான சாபம் உனனைவிட்டு நீங்கவேண்டுமொனுல் வில்வவனததைய டைநது, சோதிமயமாய்ப்பிரகாசிககும திருமூலநாதரையும், தி ருமூலநாயகியையும் பூசைசெயயின நீஙகிப்போம. தததுவஙக ளினியல்லை அவவிடததிலுனககு வுபதேசஞ்செய்வேம் என றனர். உடனே அககினிததேவன புறவடிவுநீஙகி இரண்டுகை களாலும் ஞானவீரியததை, சுவாமி தாரையாகவூறறவேற்று வாய் நிரமபவுணடு வழியே செனறனன். அதனுல அக்கினி தேவன கருதரிதது, கண்கள்குழிந்து, வயிறுவீஙகி, வருத்தமு றறுத தேவாகள் கூட்டததினைககண்டு பெருத்ததனது வயிற் றினைககரஙகளாறறட்டிப்பேசுவான். தேவாகாள்! இதைப்பாரு ஙகள உஙகள் இடரெல்லாம் போகக நாதனுர் ஞானவீரியத தை யுண்டு மெலிகினறேன. அம்மணியார்சாபத்தினல் புரு வாகிக் கற்களேததேடிததின்னவும் ஆயினே எனதுதுனபத்தி னுககுககரைகண்டேனிலலே, கருப்பததையினிததாங்கும் சத் தியெனக்கில்லே, கருப்பததினை வெளியில் விடலாமென்றல் புருவடிவு வந்தெய்தும், பூவாளூர்புண்ணியனைப் பூசிக்கில் அப்புருவுருவமும் போமென்றனன. இத்துன்பத்தைக்கேட்ட தேவர்கள் அதிகசந்தோஷத்தோடு அக்கினிதேவன் கருப்பத்

தின் உபத்திரவத்தை நீக்கப்புவனமேவடிவாகவிளங்கும் கங கையினையடைந்து, கொத்துக் கொத்தாகிய பலபுட்பங்களை யும், சிறுதளிர்களைவாய்ந்த கிளைகளையும், முத்தோடுவயிரங்க ளையும், பொன்னையும கரையிற் கொணர்ந்து கொழிக்கா நின்ற அலைகளைவாய்ந்த கங்கையினது சரணங்களைவணங்கி நின்றுவி ளம்புவாராயினா.

அன்னாய்! நெருங்கிய சடாபாரத்தினைவாய்ந்த பெருமா னுக்கு அணியே, உலகமனைத்தினுக்கு நாயகமே, ஆன்மகோ டிகளுடைய பாவங்களையெல்லாம் போக்கிப்புண்ணியத்தினை யளிக்கு மந்தாகினியே, சமுத்திரராசன் சந்தோஷிக்க முய க்கு மோகத்தினையுடைய வணங்கே! அக்கினிதேவன் கருப் பவேதனையால் மிகக்கவலைப்படுகின்றான். அவன்சந்தோஷி க்குமாறு அக்கருவதனைவாங்கி நீதரித்துக்கொள்ள வேண்டுமெ அதுசிவபெருமானளித்தது உலகமனைத்துமுள்ள இடரைத்தீ ாக்கும், உமாதேவியுஞ்சந்தோஷிப்பாள்எனரூா இவ்வாறு இரந் து கேட்டுக்கொண்ட இமையவர்கட்கு உளம் சந்தோஷிக்க அதனையேற்றுக் கொள்ளச் சம்மதித்தாள். அக்கினிதேவனும் அக்கருப்பத்தினைக் கங்கையில விட்டனன். அக்கங்கையுஞ்சில மாதமவரையில் தாங்கியிருந்து சகிக்கமாட்டாதவளாய ஒருநா ள்சரவணத்தில் உயிர்த்துவிட்டனள். அதில்தவழுகின்ற அலை களானவை அக்கருப்பத்தைச் சரவணத்தில் வைக்க அது ஆறு கப்பிரிந்து அனேகங்கோடி இளஞ்சந்திரர்களைப்போல வேறு வேறு குழந்தைகளாகப் பிரகாசித்தன. அவ்வதிசயத்தைக்கண் ணுற்ற பிரமனனவர் அதிகசந்தோஷத்தோடு ஆறுகார்த்திகை ப்பெண்களை யழைப்பித்து அவ்வாறு குழந்தைகளையும் வளர்த் துவரும்படி கட்டளையிட்டனன். அவ்வாறு பெண்களும் அக

குழந்தைகளை யெடுத்து முலைப்பாலூட்டி வளர்த்துவருகின்ற அநநாளில் ஸ்ரீசயிலததிற் கெழுந்தருளும் பொருட்டுச் சிவபெருமான்தனது தேவியாரோடு இடபவாகனரூடரா அவ்வழியே யெழுந்தருளுகையில் அக்குழந்தைகளை அம்மணியானவள்கண்டவுடன் பொன்னினதுபொடிகள்மேலே சிதைந்துகிடப்பதைப்போலததேமல படாந்தொளிரும் தனது தனஙகளிலிருந்து பால்சுரப்ப, தன்னையறியாதபடி தன்மனந்திற் சந்தோஷமுண்டாக அன்னநடையையுடைய அடிகளில் நூபுரமணிந்த பாரப்பதி என்னை! என்னை!! இஙஙனம் எனக்கும்விளையுங் குறிக ளொன்று நாயகரைககேட்டனள். இக்குழநதைகள்யாவை' இவற்றைககண்டவுடன இத்தகையமகிழ்ச்சி வருவானேனென்று குறு மூரலைவாயநத குமரிக்குப் பெருமான் கருணையாலவிளக்குவாராயினூா.

பூர்வத்தில் அக்கினிதேவனானவன் நம்மையடுத்து நாம் விட்ட ஞானவிரியத்தையுண்டான். அதைத்தாங்கும்வல்லமையில்லானாய்க் கங்கையில்விட்டனன். அவளுந்தாங்கமாட்டாது தனது கரையிலிருந்த நாணற்புல்லில் வைத்தனள். அவ்விடத்து அது ஆறுபுதல்வர்களாகி மருவின. இக்குழவியாறும் இருதாள் முகமாறு புயங்கள் பனிரெண்டுடைய வொருசேயாக்கி, தழுவிக கந்தகளபமுலைசுரக்குங் கமழ்முலையூட்டுவாயென்றருள அப்படியே அகிலமெல்லா பெறாதுபெற்ற அமலையாள்செய்தாள, உடனே பெருமானும் பெருமாட்டியும் பிள்ளையுடன் ஸ்ரீசயிலத்தினையடைந்தனர். அதன்பின் இமையோர்கள் அப்புத்திரனை அபிடேகமியற்றச் சேனாபதியாகி விஷத்தைக் கொப்புளிக்கும் படைகளையுடைய இராக்கதர்களைவேரோடுங் களைந்து தேவர்கள் சிறையை மீட்டருளினன்.

அக்கினிதேவன் தனது கருவினைக் கங்கையில்விட்டவுடன் தான் *தூதுணம்புறுவாகித் தனது புததிகுன்றினன் அப்போது அதைககண்ட தேவாகள் அப்புறுவைப்பிடிததுக் கொணடுபோய்ப் பறகுனிநதியில்முழுகுவிததாாகள். உடனே தனக்குப் பூர்வீக அறிவுபிறகக பட்சியுருவததுடனே விலவ மாவனத்தையடைந்து அணடாநாயகனடிதொழுது வணஙகி ஆகாயத்தை யளாவிவிளஙகுஞ சிகரததைவலமவநது உணவையும், உறக்கத்தையும்விட்டு, பெருமான திருவடியொனறினையே சிந்தித்துககொண்டு குங்குமசவுநதரிதனகோலமும அவா பங்காளனா கோலமுஙகண்டு பூசனையியறறிவந்தனன். அமமையாரதுசாபம அககினிககு நீஙகுமபடி மறறவடியாாகளும் சங்கற்பஞசெயதுகொணடு பறகுனியாறறிற ஸநானஞசெயதனர். வாலகிலலியாமுதலிய பெரியோாகளவணஙகுஞசீலமலகிய திருமூலநாதனை அன்பினால ஆரணததாற்றோற்றரிததுப் பூசனைசெயதனாகள், இததகைய பூசனைககிரஙகி புண்ணியாஎதிரே எழுந்தருளி தனது தேவியாரிட்டசாபத்தை நீககியருளி ஞானமுனிவர்களெலலாம்போற்றும்படிதடுதனறிசைநோககி இரத்தினங்களா லிழைககப்பெற்ற விததியாபீடததெழுநதருளித் தத்துவவுபதேசததினைத தகவாக அருளிசசெயது சிவலிங்கததின்கண் மறைந்தருளினர். பத்தியோடு ஞானஙகேட்ட அக்கினிதேவன் சிவலிங்கப்பெருமானைப் பூசைசெய்து அமரரோடு அகன்றுபோயினன்.

நீலோற்பலம்போன்ற கண்களைவாய்ந்ததேவியாரால் சாபம் பெற்ற அன்றுமுதல் புறுக்கள் ஆணுபெண்ணுமாக வொருவயிற்றிற்பிறந்து தூதுணங்கற்களையுண்டு தஙகளுககுள்ளேயே

---

*தூதென்பது சிறுபருக்கைக்கற்களை.

